வெளியீடு எண்: 353.

# திருமுறைத் தலப் பயண விளக்கம்



திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை - 609 803

986






உ

சிவமயம்

# ஸ்ரீ ஞானமா நடராஜப்பெருமான்

# ஆனித் திருமஞ்சன விழாமலர்

அட்சய — ஆனி — 29

**(13-7-1986)**





திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான

**விளாபூசைக் கட்டளை வெளியீடு**

கல்லிடைக்குறிச்சி

திருநெல்வேலி மாவட்டம்.

334

வெளியீடு எண் : 353

உ

சிவமயம்

# திருமுறைத் தலப் பயண விளக்கம்



இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்துமூன்றுவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
**வெளியிடப்பெற்றது.**



**திருக்கயிலாய பரம்பரைத்**
**திருவாவடுதுறை ஆதீனம்**
**1986**



ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திராவிடமாபாடியகர்த்தர்
ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள்

உ

சிவமயம்

# முகவுரை

............

சைவ சமயத்திற்கு அழியாத நிலைக்களம் திருக்கோயில்கள். இவ்வுண்மையினை நாம் உணர்ந்து நெறியில் ஒழுகி நலம் பெறுதற் பொருட்டுத் தேவாரத் திருமுறைகளைத் திருவாய் மலர்ந்தருளிய சமயாசாரியர்கள் தமிழகம் எங்கணும் தலப்பயணஞ் செய்து, அவ்வத் தலங்களிலுள்ள சிவாலயங்களில் திருப்பதிகங்கள் ஓதி மேன்மைகொள் சைவநீதியினை உலகமெலாம் விளங்கச் செய்தனர்,

*'' கால் களாற்பயனென்- கறைக் கண்ட னுறைகோயில்*
*கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக் கால்க*
*ளாற்பயனென் ''*

எனும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளுரை திருக்கோயில்களை வழிபடவேண்டியது எவ்வளவு இன்றியமையாதது என்பதை நன்கு அறிவிக்கின்றது.

திருவருட்பொலிவும் கலையழகும் நிறைந்த திருக்கோயில்கள் தமிழ்நாடெங்கிலும் அமைந்து திகழ்கின்றன, அத் திருக்கோயில்களில் நாள் வழிபாடுகளும் திருவிழாக்களும் முட்டின்றி முறையாக நடைபெறுதற்கும், சமய நல்வாழ்வு மலர்தற்கும் செய்யப்

பெற்றுள்ள நிலையான ஏற்பாடுகள், நம் முன்னோர்கள் சிவாலய வழிபாட்டில் கொண்ட அன்பின் மேன்மையினை உணர்த்துவனவாகும்.

திருவருள் நிலயங்களாக விளங்கும் தலங்களைச் சென்று வழிபடுதலால் பக்தி வளர்கிறது; அவ்விடங்களில் உள்ள மக்களையும் பல்வகைக் காட்சிகளையும் காண்பதால் அறிவு வளர்ச்சிக்கும் வாய்ப்பு அமைகின்றது. இவ்வண்ணம் இன்ப நல்வாழ்விற்கு அரண் செய்யும் திருக்கோயிலமைந்த திருவுடைத் தலங்களையெல்லாம் முறையாகச் சென்று வழிபடுதலை நம் முன்னோர்கள் நெறியாய்க்கொண்டு ஒழுகினர். அவ்வழியில் ஒழுகி மக்கள் நலம் எய்துதற்குத் துணை செய்யும் தலப்பயண நூல்கள் பல பலரால் இயற்றப் பெற்றன.

நூற்றிருபது ஆண்டுகட்கு முன்னர் திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவார் அவர்களால் இயற்றப் பெற்ற "க்ஷேத்திரச் சிவநாமத் தேவார விளக்கம்" எனும் நூலுக்கு விளக்கமாகத் தலவரலாற்றுச் சுருக்கத்துடன் ஒருநூல் ஆதீன வெளியீடாக (எண் 304) 1978-ல் வெளியிடப்பட்டது. அவ்வெளியீடு முழுதும் தற்பொழுது செலவாகிவிட்டன. அந்நூலினை வேண்டும் திருத்தங்களுடன் தலப்பெருமான் பிராட்டியார் திருப்பெயர்கள், தலம் பெற்ற பதிகங்களைப்பற்றிய குறிப்புகள் முதலியன சேர்த்து அச்சிடுவிக்க இவ்

வாதீனத்து இருபத்துமூன்றாவது குருமகாசந்நிதான மாக எழுந்தருளிச் சிவஞானதான வள்ளலாக விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ **சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** கட்டளையிட்டருளினார்கள். அவர்கள் அருளாணையின் வண்ணம் "**திருமுறைத் தலப்பயண விளக்கம்**" எனும் இந்நூல் அட்சய ஆண்டு ஆனித்திருமஞ்சனத் திருநாளாகிய (13-7-86) இன்று ஆனித் திருமஞ்சன விழா மலராக வெளிவரு கின்றது. இத்தகு சிவப்பணிகளில் சிறியேனையும் ஆட்படுத்தி அருள்பாலிக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பொற்பாத கமலங்களை என்றும் பணிந்து வணங்கும் கடப்பாடுடையேன்.

இப் பதிப்பில் அடியேன் அறியாமையால் செய்த பிழைகளைப் பொறுத்தருளப் பெரியோர்களைப் பன் முறை வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

சரசுவதிமகால் நூல்நிலயம்
திருவாவடுதுறை
13—7—1986.

இங்ஙனம்,
**பா. மகாலிங்கம்,**
ஆதீன நூலகர்.

௧.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத்
தன்னடியே பாடுந்தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின்மேலான்
ஏழண்டத்
தப்பாலான் இப்பாற்செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான்
நெருப்பிடையான் காற்றினுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தியான்
அவனென் கண்ணுளானே.

— திருநாவுக்கரசு சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# திருமுறைத் தலப் பயண விளக்கம்



திருவூறல் விளநகர் நெல்வேலி வலிதாயஞ்
சேஞ்சலூர் கொடுமுடி செங்குன்றூர் வியலூர்
கருவூர்ப் பாற்றுறை முக்கீச்சரங் கள்ளில்
கொள்ளிக்காடு கச்சிநெறிக் காரைக்காடு வேற்காடு
திருவாலூர்ப் பசுபதீச் சரங்காட்டுப் பள்ளி
சிக்கல் சக்கரப்பள்ளி அகத்தியான் பள்ளி
கரவீர நெல்வாயில் வல்லமுல்லை வாயில்
காருயில் கொடுங்குன்றம் நெடுங்களம் வக்கரையே.

அறையணிநல் லூர்பழுவூர் மீயச்சூர் தேங்கூர்
ஆப்பனூர் கலிக்காமூர் மயிலாப்பூர் அழுந்தூர்
பறியலூர் பெரும்புலியூர் எருக்கத்தம் புலியூர்
பாம்புரஞ்சோ புரந்தரும புரம்ஒத்தூர் பனந்தாள்
சிறுகுடிவிற் குடிவீரட் டம்நண்ணுத் திருந்து
தேவன்குடி கருக்குடி வேட்டக்குடி சிற்றேமம்
புறவார் பனங்காட்டூர் நெல்லிக்கா வைகர்ப்
புள்ளமங்கை சாத்தமங்கை கொள்ளம்பூ தூரே. 2

பருதிநிய மந்தலேச்செங் காடிந்த்ர நீலப்
பருப்பதங்கண் ணூர்கோயி லரதைப்பெரும் பாழி
பெருமணமச் சிறுபாக்கந் திருக்கச்சின மம்பர்பெருந்
திருக்கோயில் பேணுபெருந் துறைவெண் டுறையோ
டரைசிலிதென் குடித்திட்டை களர்வடுகூர் கோட்டூர்
அனேகதங்கா பதம்விளமர் ஏடக மாடானை
திருவிரும்பை மாகாளங் குடந்தைக்கா ரோணந்
தெளிச்சேரி மதிமுத்த மிராமன தீச்சரமே. 3

வடகரை மாந்துறை யிடும்பாவன முசாத்தான
மாணிகுழி கோணமலை யீங்கோய் மலையே
கடைமுடி பட்டீச்சரம் விற்கோல மாகறல்
வைகன்மா டக்கோயின் மயேந்திரப்பள்ளி நெல்
[வெண்ணை
வடகரை நற்குரங்கா டுதுறை புகலூர்
வர்த்தமா னீச்சரம் நாலூர்மயான மிரும்பூளை
நெடியகுரங் கணிமுட்ட மிடைச்சுரந் தண்டலைநீ
ணெறியிலம் டயங்கோட்டூர் பாதாளீச் சரமே. 4

கோலக்கடிக்குள மிவைக்குப் பிள்ளையார் கூறுங்
கோளின்மெய்ப்பதிகங்கள் ஒவ்வொன்றே பயற்றூர்
பாலைத்துறை கடம்பந்துறை பள்ளியின்முக் கூடல்
பழையாறை வடதளிமுண் டீச்சரம் வாள்போக்கி
நீலக்குடி மீயச்சூர் இளங்கோயில் வன்னியூர்
நிகழ்கடுவாய்க் கரைப்புத்தூர் பேரெயில் கன்றாப்பூர்
ஆலம்பொழில் கொட்டையூர் குடந்தைக் கீழ்க்
[கோட்டம்
ஆப்பாடி குரக்குக்காத் தலையாலங் காடே. 5

கருவிலிவண் கஞ்சனூர் பூவனூர் மேலோர்
   கருதுசத்தி முற்றமிவை கட்கு நாவரசர்
உரைசெய்தருள் திருப்பதிகம் ஒவ்வொன்றே சுழியல்
   ஓணகாந் தன்றளிகச் சூராலக் கோயில்
பரவையுண்மண் டளிகச்சி யனேகதங்கா பதம்
[வெண்பாக்
   கம்பார்த்தான் பனங்காட்டூர் துறையூர் நீடூர்
திருமுருகன் பூண்டி அஞ்சைக்களங் கலையநல்லூர்
   தினைநகர் நன்னிலத்துப் பெருங்கோயி லிடையாறே.

வெண்ணைநல்லூர் நாட்டியத்தான் குடிகோடிக்
   வெஞ்சமாக் கூடறிருக் கானட்டு முள்ளூர் [குழகர்
மண்ணிப்படிக்கரை எதிர்கொள் பாடி வடமுல்லை
   வாயில்திருக் கூடலையாற் றூர்நாவ லூரோ(டு)
உண்மையருள் அவிநாசி யிவைக்கூரர் பதிகம்
   ஒவ்வொன்றே யிரண்டுபெற்ற பதியுரைக்கில் தேவூர்
வன்மையுள பல்லவனீச் சரந்திருக்கோட் டாறு
   வளர்குற்று லங்குடவா யிற்பகுதி மன்னே. 7

பிள்ளையா ரருள்பதிக மிவ்விரண்டே யிப்பாற்
   பேணியவா ரூரிலர னெறிகொண் டீச்சரத்தோ(டு)
உள்ளெறும்பி யூர்குறுக்கைக் கிவ்விரண்டே பதிகம்
   உரைத்தனர்நா வுக்கரசர் திருவோமாம் புலியூர்
தெள்ளியகோ ழம்பமணஞ் சேரிநல்லம் ஆக்கூர்
   சிராப்பள்ளி பெருவேளூர் கீழ்வேளூர் கானூர்
வெள்ளைவிடை யோன்விசைய மங்கைதிருப் புத்தூர்
   விளங்கியமே லைக்காட்டுப் பள்ளிகுட மூக்கே. 8

திருவேதிகுடி பராய்த்துறை கோவலூர் பாதிரிப்
புலியூ ரவளிவ னல்லூர் பந்தணநல்லூர்
கருகாவூர் அன்பிலா லந்துறைகோ கரணங்
கண்டியூர் தூங்கானை மாடம் வேட்களமே
அரியகுரங் காடுதுறை திருமங்கலக் குடியோர்
அன்னியூர் இவைக்குச் சம்பந்தர் நாவரசர்
உரைசெய்தருள் பதிகம் ஒவ்வொன் று கருப்பறியலூர்
கானப்பேர் வெள்விக்குடி குருகா வூரே. 9

பனையூர் கேதாரம் பரங்குன் றங் கோலக்காப்
பாச்சிலாச் சிராமங் கேதீச்சரம் விண்பணியும்
புனவாயில் இவைக்குச் சம்பந்தர் ஆரூரர்
புகல்பதிகம் ஒவ்வொன் று கச்சிமேற் றளிக்கு
முனபரசர் ஆரூரர் திருப்பதிகம் ஒவ்வொன் றும்
மொழிந்தனரிப் பான்மூன் று பெறுபதிகண்
நினைவரிய வம்பர்மா காளம்பூந் துருத்தி [மொழியின்
நிரனிறைசம் பந்தரப்பர் நிகழ்த்தினர் மும்மூன்றே.

மருகன்மயி லாடுதுறை திருவிரா மீச்சரம்
வான்மியூர் செங்காட்டடங் குடிவளரைந் திற்கு
முருகுபந்தர் இரண்டரசர் ஒன் றுதிருப் பதிகம்
உரைத்தனர்பா சூர்கடம்பூர் புள்ளிருக்கும் வேளூர்
திருவாய்மூர் வெண்ணிசெம்பொன்பள்ளி திருச்சேறை
திகழுமே ழினுக்குப்பந்தர் ஒன் றரசர் இரண்டே
பொருவிலா வாழ்கொளிபுத் தூர்க்குச் சம்பந்தர்
புகன் றதிரண் டரரொன் று புறம்பியம் வாஞ்சியமே.

அரத்துறைபுன் கூர்பாண்டிக் கொடுமுடி பைஞ்ஞீலி
அரிசிற்கரைப் புத்தூர் நற்கடவூ ரின்மயானந்
துருத்திதிரு நனிபள்ளி கற்குடிமா மலைதான்
சுருதிகலை தோத்திரஞ்செய் துகளில்கழுக் குன்றம்
பருப்பதம்பன் மூன்றினுக்கு மூவருமொவ் வொன்று
பகர்ந்தனரிப் பாலுன்கார் பதிமுதலாம் பதியிற்
திருத்திகழ்மூ வர்கள்பதி கமுறையே எண்ணிடுவன்
சிவனடியார் அடிபரவித் தெரிந்தறிந்த வாறே. 12

வலம்புரங்கோ ளிலியாலங்காடொன் றிரண்டொன்றே
வலிவலங்காளத்திப்பூ வணமிரண்டொன் றொன்றும்
இலங்குசாய்க் காடதற்கு ஞானசம் பந்தர்
இயலுவுக் கரசர்திருப் பதிகமிரண் டிரண்டே
வலங்கொணின்றி யூர்க்கொன்றொன் றிரண்டுசிவ புர
வளநகர்க்குப் பிள்ளையார் மூன்றரசர் ஒன்றே [மாம்
நலங்கிளருங் கோடிகா நகரினுக்கவ் விருவர்
நவின்றதொன் று மூன்றுகு நற்பதிகந் தானே. 13

நறையூர்ச்சித் தீச்சரஞ் சம்பந்தர் மூன றூரர்
நவின்றதொன் று வலஞ்சுழி நல்லூர் நாரையூர்க்குக்
குறைவிலாச் சம்பந்தர் மூன்றரசர் இரண்டே
கூறியவின் னம்பருக்கங் கவர்களொன்று நான்கா
மறையண்ணு மலைநகர்க்கு மவ்விருவர் தாமே
அருள்செய்த இரண்டுமூன் றுகுமரு ளாரும்
இறையுறையு மாமாத்தூர்க் கிரண்டிரண் டொன்றுகு
மெழிற்கடவூர் தனக்கொன்றியன் மூன்றொன் றுமே

மழபாடி வெண்காடு மூன்றிரண்டோன் றுகு
 மன்னுநா கேச்சரத்துக் கிரண்டுமூன் றொன்றே
பழனம்நெய்த் தானமொன் றைந்துபந்தர் அப்பர்
 பகர்மாற்பே றதற்கவர்க ளிரண்டுநான் காகு
மொழிசோற்றுத் துறைக்கொன் று நான்கொன்று
 [னைக்கா
 மூன்றுமூன் றொன்றுநள்ளா றுநான் கிரண்டோன்
றழகாருங் கயிலாய மிரண்டுநான் கொன்று
 மணிநாகைக் கிரண்டுநான் கிரண்டாக வறையே. 15

முதுபுகலூர் கழிப்பாலைக் கிரண்டஞ்சொன் றொற்றி
 முதற்பதியா வடுதுறைக்கொன் றஞ்சிரண்டெல்
 [லோர்க்குங்
கதியளிக்கு மறைக்காடு நான்கஞ்சொன் றுகுங்
 கடியிலங்கு தில்லைநகர்க் கிரண்டெட்டொன் றுமே
முதுகுன்றுக் கேழொன்று மூன்றுமது ரைக்கு
 மொழிபந்த ரொன்பதப்ப ரிரண்டே கம்பத்துக்
கதிகமா நான்கேழொன் றிடைமருதா றஞ்சொன்று
 ஐயாற்றுக் கஞ்சுபன்னி ரண்டொன்று மன்றே 16

வாழதிகைக் கொன்றுபதி னறுடனொன் றுகும்
 வளர்விழிக் கொருபதினெந் தெட்டொன்று ரர்க்குத்
தாழ்வில்லா வைந்திருபத் தொன்றுடனெட் டமுகே
 தருகாழிக் கறுபத்தேழ் மூன்றொன்றே மூவர்
ஆழிசூழ் பதிகளிரு நூற்றெழுபா னுன்குக்
 கருள்பதிக மெழுநூற்று நாற்பத்தொன் பானே(டு)
ஏழ்முப்பத் தேழ்நான்கு பொதுப்பதிக மாக
 வெழுநூற்றுத் தொண்ணூற்றே ழிசைப்பதிகந்
 [தானே. 17

---

## காவிரி வடகரையில் உள்ள தலங்கள்

### சிதம்பரம்

சுவாமி : சபாநாயகர், திருமூலநாதர்.
அம்பாள் : சிவகாமி, உமை அம்மை.

சிதம்பரம் ரயில்வே நிலையத்துக்கு மேற்கே 2 கிலோமீட்டரில் உள்ளது. பூலோக கயிலாயம், கனக சபை, பல அடியார்கள் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். அர்த்தயாம தரிசனம் விசேடம். கோவிந்தராஜபெருமாள் சந்நிதி சபைக்குத் தென்மேற்கில் இருக்கிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றுனும் சிறப்புடையதும் தரிசிக்க முத்தி கொடுப்பதுமாகிய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 8, சுந்தரர் 1 ஆக 11.

### திருவேட்களம்

சுவாமி : பாசுபதஈசுவரர் அம்பாள் : நல்லநாயகி

சிதம்பரம் ரயில்வே நிலையத்துக்குக்கிழக்கே 3 கிலோ மீட்டரில் தலம் உள்ளது அருச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்ததலம். வைகாசி விசாகத்தில் உற்சவம் நடைபெறுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2.

### திருநெல்வாயில்

சுவாமி : உச்சிநாதர் அம்பாள் : கனகாம்பிகை

சிதம்பரம் ரயில்வே நிலையத்துக்குத் தென்கிழக்கே 4 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. சிற்ப வேலைப்பாடுடைய கோயில். இத்தலத்திற்குச் சிவபுரி என்ற திருப்பெயரும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1.

## திருக்கழிப்பாலை

சுவாமி : பால்வண்ணநாதர் அம்பாள் ; வேதநாயகி

இத்தலம் கொள்ளிட நதியில் ஆழ்ந்துவிட்டது. சிதம்பரத்துக்குத் தென்கிழக்கில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ள சிவபுரியில் தனி ஆலயமமைத்து இறைவரை வைத்துள்ளார்கள்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 5, சுந்தரர் 1 ஆக 8.

## திருநல்லூர்ப்பெருமணம்

சுவாமி : சிவலோகத்தியாகேசர்

அம்பாள் ; உமையம்மை

ஆச்சாள்புரம். கொள்ளிடம் ரயில்வே நிலையத்துக்குக் கிழக்கே 5 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. திருஞானசம்பந்தர் திருமணக் கோலத்துடன் சோதியில் கலந்த தலம். திருமணவிழா இன்றும் சிறப்பாக நடைபெறுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1.

## திருமகேந்திரப்பள்ளி

சுவாமி ; திருமேனியழகர் அம்பாள் ; வடிவாம்பிகை

கொள்ளிடம் ரயில்வே நிலையத்துக்குக் கிழக்கு, 10 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. இடையில் ஆச்சாள்புரம் இருக்கிறது. பேருந்து வசதி உண்டு. இத்தலத்திற்குக் கோயிலடிப் பாளையம் என்ற வேறு பெயரும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## தென் திருமுல்லைவாயில்

சுவாமி ; முல்லைவனநாதர் அம்பாள் ; கோதையம்மை

கடற்கரை ஓரமாக உள்ள தலம். சீகாழியிலிருந்து கிழக்கே 12 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. பஸ் வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கலிக்காமூர்

சுவாமி ; சுந்தரேசர் அம்பாள் ; அழகம்மை

அன்னப்பன்பேட்டை. திருமுல்லைவாயிலுக்குத் தென்மேற்கில் 5 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. உப்பனாறு கடக்க வேண்டும். சாயாவனத்துக்கு வடக்கு 6 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது,

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1.

## திருச்சாய்க்காடு

சுவாமி : சாயாவனேசுவரர்
அம்பாள் : குயிலினுநன்மொழியாள்

சாயாவனம். சீகாழிக்குத் தென்கிழக்கில் 10 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. பஸ் வசதியுண்டு. மயிலாடுதுறையிலிருந்தும் பஸ் வசதியுண்டு. பூம்புகார் செல்லுகின்ற வழி.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 2, ஆக 4.

## திருப்பல்லவனீச்சரம்

சுவாமி ; பல்லவனநாதர் அம்பாள் ; சௌந்தரநாயகி

சீகாழிக்குத் தென்கிழக்கே 12 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. பஸ் வசதியுண்டு. பல்லவ அரசன்

வழிபட்ட தலம். இயற்பகைநாயனார், பட்டினத்துப் பிள்ளையார் அவதரித்த தலம். திருச்சாய்க்காடு இதன் அண்மையில் இருக்கிறது. இதுபொழுது கோயில் நன்கு பராமரிக்கபட்டு வருகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 2 ஆக 2

## திருவெண்காடு

சுவாமி ; சுவேதாரண்யர்

அம்பாள் ; பிரமவித்தியாநாயகி

*சீகாழிக்குத்* தென்கிழக்கில் 8 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. பஸ் வசதியுண்டு. ஆதிசிதம்பரம அகோரமூர்த்தி சந்நிதி விசேடம். நடராஜர் சந்நிதி விசேடம். இத்தலத்தில் மூன்று தீர்த்தம் உள்ளன. இத்தலத்தில் மூன்று மூர்த்தி, மூன்று விருட்சம் (வில்வம், கொன்றை, ஆல்) விசேடம். ஆலடியில் பிதிர்க்கடன் செய்வது விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 3, நாவுக்கரசர் 2 சுந்தரர் 1 ஆக 6

## கீழைத்திருக்காட்டுப்பள்ளி

சுவாமி: ஆரண்யசுந்தரர் அம்பாள்: அகிலாண்டநாயகி

இத்தலம் *சீகாழிக்குத்* தென்கிழக்கில் 8 கிலோ மீட்டரில் உள்ள திருவெண்காட்டுக்கு மேற்கே 2 கிலோ மீட்டரில் உள்ளது. *சீகாழியிலிருந்து* திருவெண்காட்டிற்குப் பஸ்வசதி உண்டு. மேற்குப்பார்த்த சந்நிதி. தேவர்கள் வழிப்பட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக1

## திருக்குருகாவூர் வெள்ளடை

சுவாமி ; வெள்ளநாதர் அம்பாள் : காவியங்கண்ணி

இது திருக்கடாவூர் என்று வழங்குகின்றது. சீகாழிக்கு 6 கிலோ மீட்டர். தூரத்திலுள்ளது. சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கும் பரிவாரங்களுக்கும் கட்டமுதும் தண்ணீரும் வழங்கிய தலம். கோயிலுக்கு வெளியே பாற்கிணறு தீர்த்தம் இருகிறது. தை அமாவாசை இங்கு விசேடம்.

பதிகங்கள்: சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2.

## திருப்பிரமபுரம் (சீகாழி)

சுவாமி : பிரமபுரிநாதர் அம்பாள் : திருநிலைநாயகி

சீகாழியின் 12 திருப்பெயர்களுள் இதுவும் ஒன்று. பிரமன் வழிபட்டதலம். சீகாழி ரயில் நிலயத்திலிருந்து கிழக்கே 2 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. .வண்டி வசதி எப்பொழுதும் உண்டு. ஞானசம்பந்தருக்குத் தனி ஆலயம் கோயிலுள் இருக்கிறது. அருணாசலக் கவிராயரால் பாடப்பட்ட தல புராணம் அச்சிடப்பட்டுள்ளது. தோணியப்பர், சட்டைநாதர் சந்நிதி விசேடமானவை. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் சட்டைநாதருக்குப் புனுகு சாத்துதல் விசேடமாக நடைபெறுகிறது. சித்திரை மாதம் திருமுலைப்பால் உற்சவம் இங்கு விசேடமானது.

பதிகங்கள் : சம்பந்தர் 67, நாவுக்கரசர் 3 சுந்தரர் 1 ஆக 71

### திருக்கோலக்கா

சுவாமி : சத்தபுரிநாதர்
அம்பாள் ; ஓசைகொடுத்தநாயகி

திருத்தாளமுடையார்கோயில் சீகாழி ரயில்வே நிலயத்துக்குத் தென்கிழக்கில். ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருஞானசம்பந்தர் பொற்றுளம் பெற்ற தலம். அம்பிகை தாளத்துக்கு ஓசை கொடுத்தமையால் ஓசைகொடுத்த நாயகி என்ற பெயர் கொண்டு வணங்கப்படுகிருர்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

### திருப்புள்ளிருக்குவேளுர்

சுவாமி ; வயித்தியநாதர் அம்பாள் ; தையல்நாயகி

வைத்தீஸ்வரன்கோயில் ரயில்வே நிலயத்துக்குக் கிழக்கே ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சம்பாதி. சடாயு வழிபட்ட தலம். மாதந்தோறும் கிருத்திகை விசேடம். பஸ் வசதியும் உண்டு. பிரார்த்தனைத் தலம். தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

### திருக்கண்ணுர்கோயில்

சுவாமி : கண்ணுயிரநாதர்
அம்பாள் : முருகுவளர்கோதை

குறுமாணக்குடி, வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் தென்கிழக்கில் மூன்று கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இந்திரன் சாபம் நீங்கிய தலம். சிறிய கோயிலாயினும் அழகானது. புதிதாகத் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கடைமுடி

சுவாமி : கடைமுடிநாதர் அம்பாள் : அபிராமி

கீழையூர் என இதுபொழுது வழங்கப்படுகின்றது. செம்பொனார்கோவில் ரயில்வே நிலயத்துக்கு வடக்கே ஐந்து கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கோயில் சிறியது. பிரமன் வழிபட்ட தலம். மயிலாடுதுறையிலிருந்து பஸ் வசதி இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருநின்றியூர்

சுவாமி : மகாலட்சுமிநாதர் அம்பாள் : உலகநாயகி

இத்தலம் ஆனந்ததாண்டவபுரம் ரயில்வே நிலயத்துக்கு வடகிழக்கில் மூன்று கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது சீகாழியிலிருந்து பஸ் வசதியுண்டு. கோயில்சிறியது. இலக்குமி வழிபட்ட தலம். சீகாழியிலிருந்து பஸ்ஸில் செல்வதுதான் சிறந்த வழி.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 2 ஆக 4

## திருப்புன்கூர்

சுவாமி : சிவலோகநாதர் அம்பாள் : சொக்கநாயகி

வைத்தீஸ்வரன் கோயில் ரயில்வே நிலயத்துக்கு மேற்கே நாலு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருநாளைப்போவார் பொருட்டு நந்தி விலகிய தலம். இறைவனுக்குப் புனுகுசட்டம் சாத்துகிறார்கள். நந்தி விலகிய காட்சி காணவேண்டியது பஸ் வசதி எப்பொழுதும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## நீடூர்

சுவாமி : சோமநாதர் அம்பாள் : வேயுறுந்தோளி

இத்தலம் நீடூர் ரயில்வே நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது முனையடுவார் நாயனர் முத்திபெற்ற தலம். ஆவணி ஞாயிறுகளில் சூரியபூஜை விசேடம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திரு அன்னியூர்

சுவாமி : ஆபத்சகாயர் அம்பாள் : பெரியநாயகி

நீடூர் ரயில்வே நிலயத்திலிருந்து மேற்கே 5 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது வருணன் வழிபட்ட தலம். பங்குனி 24, 28 சூரியபூசை நடைபெறும். வண்டி வசதிகள் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருவேள்விக்குடி

சுவாமி : கல்யாணசுந்தரர்

அம்பாள் : பரிமளசுகந்தநாயகி

குத்தாலம் ரயில்வே நிலயத்திற்கு வடகிழக்கே 5 கிலோ மீட்டரில் உள்ளது

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருவெதிர்கொள்பாடி

சுவாமி : அயிராவதநாதர்

அம்பாள் : மலர்க்குழலாம்பிகை

குத்தாலம் ரயில் நிலயத்திலிருந்து திருவேள்விக்குடி வழியாக வடமேற்கே 7 கிலோ மீட்டர் சென்ருல் இத்தலத்தை அடையலாம் ஐராவதம் வழிபட்டதலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருமணஞ்சேரி

சுவாமி ; மணவாளநாதர்
அம்பாள் : யாழினுமென்மொழியாள்

குத்தாலம் ரயில்வே நிலயத்துக்கு வடகிழக்கே 4 கிலோமீட்டர் சென்றால் திருவேதிக்குடி அடையலாம் அங்கிருந்து 3 கிலோமீட்டர் தொலைவில் திருமணஞ் சேரி. மன்மதன் வழிபட்ட இடம். திருமணமாகாதோர் பிரார்த்தனை செய்துகொள்ளும் தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்குறுக்கை

சுவாமி ; வீரட்டநாதர் அம்பாள் ; ஞானம்பிகை

நீடூர் ரயில்வே நிலயத்தில் இருந்து வடக்கே 10 கிலோமீட்டர் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். அட்டவீரட்டங்களுள் இதுவும் ஒன்று. காமனை எரித்த தலம். இன்றும் வீதியில் சாம்பல் மண்புரளுவது கண் கூடு. தீர்க்கவாகு முனிவரின் கை குறுகிய தலம். முனிவர் குறுகியகையுடன் பிரகாரத்தில் காட்சி கொடுக்கிறார். எதிரே கடுக்காய் மரம் உள்ளது. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாடிய தல புராணம் இத்தலத்திற்கு உண்டு.

பதிகங்கள் ; நாவுக்கரசர் 2, ஆக 2

## திருக்கருப்பறியலூர்

சுவாமி ; குற்றம்பொறுத்தநாதர்
ம்பாள் : கோல்வளைநாயகி

வைத்தீஸ்வரன்கோயில் ரயில்வே நிலயத்திற்கு மேற்கே 8 கிலோமீட்டரில் உள்ளது இத்தலம் மேலைக் காழி அல்லது தலைஞாயிறு என்றும் வழங்கப்படுகிறது

ஆலயத்துக்குக் கொகுடிக் கோயில் என்று பெயர். கொகுடி முல்லை படரும் மரமும் இலிங்கமும் பிரகாரத்தில் உள்ளன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருக்குரக்குக்கா

சுவாமி : கொந்தளக்கருணைநாதர்
அம்பாள் : கொந்தளநாயகி

வைத்தீஸ்வரன்கோயில் ரயில் நிலயத்திலிருந்து மேற்கே 6 கிலோமீட்டர் தொலைவில் மண்ணிப் பள்ளம். அங்கிருந்து வடக்கே 3 கிலோமீட்டர் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். இடையில் ஆறு ஓடுகின்றது. அனுமார் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1 ஆக 1

## திருவாழ்கொளிபுத்தூர்

சுவாமி : மாணிக்கவண்ணர்
அம்பாள் : வண்டார்பூங்குழலி

வைத்தீஸ்வரன்கோயில் ரயில்வே நிலயத்திற்கு மேற்கே 8 கிலோமீட்டரில் உள்ளது மண்ணிப்படிக் கரை (இலுப்பைப்பட்டு) வழியாகச் செல்லவேண்டும் திருமால் மாணிக்கத்தை வைத்து வழிப்பட்ட தலம் இதனால் இதற்கு அரதனபுரம் என்ற பெயரும் உண்டு அருச்சுனனுடைய கைவாளை இறைவன் புற்றில் ஒளித்து வைத்ததாகப் புராண வரலாறு, பஞ்சவர் வழிபட்ட இலிங்கங்களும் திரௌபதி பூசித்தவலம்புரி விநாயகரும் கோயிலின் எதிரில் நச்சுப்பொய்கையும் காணவேண்டுவன. துர்க்கை சந்நிதி இங்கு மிகவும் விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, சுந்தரர் 1, ஆக 3

## திருமண்ணிப்படிக்கரை

சுவாமி : நீலகண்டர் அம்பாள் : அமிர்தகரவல்லி

இலுப்பைப்பட்டு. வைத்தீஸ்வரன் கோயில் ரயில்வே நிலயத்துக்கு மேற்கில் 12 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது மோட்டார் வசதியுண்டு. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. தல வரலாறு அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவோமாம்புலியூர்

சுவாமி : துயரந்தீர்த்தநாதர்

அம்பாள் : பூங்கொடிநாயகி

குத்தாலம் ரயில்வே நிலயத்துக்கு வடக்கே 15 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது தட்சிணாமூர்த்தியிடம் அம்பிகை பிரணவ உபதேசம் பெற்றதலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1 ஆக 2

## திருக்கானாட்டுமுள்ளூர்

சுவாமி : பதஞ்சலிநாதர் அம்பாள் : கானார்குழலி

சிதம்பரத்தில் இருந்து மன்னார்குடிக்குப் பேருந்தில் சென்று அங்கிருந்து ஓமாம்புலியூர் வழியே சென்றால் 3 கிலோமீட்டரில் இத்தலத்தை அடையலாம் கோயிலில் அத்திமரமும் வெள்ளெருக்கஞ் செடியும் இன்றும் உள்ளன.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருநாரையூர்

சுவாமி : சவுந்தரியநாதர் அம்பாள் : திரிபுரசுந்தரி

சிதம்பரத்திற்குத் தென்மேற்கே 15 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. நாரை வழிபட்ட தலம். பொல்லாப் பிள்ளையார் சந்நிதி விசேடம்.

பதிகங்கள் ; சம்பந்தர் 3, நாவுக்கரசர் 2, ஆக 5

## திருக்கடம்பூர்

சுவாமி: அமுதகடநாதர் அம்பாள்: சோதிமின்னம்மை

சிதம்பரத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. பேருந்து நிலயத்திலிருந்து ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கரக்கோயில் என்று பெயர். ஓமாம் புலியூர் இதன் அண்மையிலுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3.

## திருப்பந்தணைநல்லூர்

சுவாமி : பசுபதிநாதர் அம்பாள் : காம்பன்னதோளி

குத்தாலம்ரயில் நிலையத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு காமதேனு வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருக்கஞ்சனூர்

சுவாமி : அக்கினிசுவரர் அம்பாள் : கற்பகநாயகி

நரசிங்கன்பேட்டை ரயில் நிலயத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அரதத்த சிவாச்சாரியார் சைவத்தின் மேன்மையை நிலைநாட்டிய

தலம். பேருந்து வசதி உண்டு. மாசிமகம் காவிரி தீர்த்தமாடல் விசேடம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருக்கோடிகா

சுவாமி ; கோடீசுவரர் அம்பாள் ; வடிவாம்பிகை

நரசிங்கன்பேட்டை ரயில் நிலயத்திலிருந்து வடக்கே இரண்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. காவிரி ஆற்றின் வடகரையில் உள்ளது. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 3, ஆக 4

## திருமங்கலக்குடி

சுவாமி : மாணிக்கவரதர் அம்பாள் : மங்களநாயகி

ஆடுதுறை ரயில் நிலயத்திலிருந்து வடக்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. காளி வழிபட்ட தலம். பேருந்து வசதி உண்டு: திருவாவடு துறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. அண்மை யில் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமான சூரியனார்கோவில் உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருப்பனந்தாள்

சுவாமி : சடையப்பநாதர் அம்பாள் : பெரியநாயகி

ஆடுதுறை ரயில் நிலயத்திலிருந்து வடக்கில் ஒன்பது கிலோமீட்டர் தொலைவில் உள்ளது பேருந்து வசதி உண்டு. மண்ணியாறு கோயிலுக்கு மேல்பால் ஓடுகின்றது. இறைவன் சாய்ந்திருந்ததைக் குங்கிலியக்கலய நாயனர் நிமிர்த்தார். பிரகாரத்தில் இரண்டு ஆண் பனைகள் இருக்கின்றன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருஆப்பாடி

சுவாமி: பாலுகந்தநாதர் அம்பாள்: பெரியநாயகி

ஆடுதுறை ரயில் நிலயத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் தொலேவில் உளது. பேருந்து வசதி உண்டு. சண்டேசுவர நாயனர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் நாவுக்கரசர் 1, ஆக 1

## திருச்சேய்ஞலூர்

சுவாமி: சந்தகிரிநாதர் அம்பாள்: சகிதேவி

கும்பகோணத்துக்கு வடகிழக்கில் பத்து கிலோ மீட்டர் தொலேவில்உள்ளது. பேருந்து வசதி உண்டு. குமரப்பெருமான் தங்கிய இடம். சண்டேசுரநாயனர் அவதரித்து முத்திபெற்றதலம். ஒரு கிலோமீட்டர் தொலேவில் திருவாப்பாடியும் இரு கிலோமீட்டர் தொலேவில் திருப்பனந்தாளும் இருக்கின்றன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருந்துதேவன்குடி

சுவாமி: கர்க்கடகநாதர் அம்பாள்; அருமருந்தம்மை

திருவிடைருதாருக்கு வடக்கில் ஆறு கிலோமீட்டர் தொலேவில் இருக்கிறது. ஊர் இப்பொழுது இல்லே, கோயில்மட்டும் நன்செய் நிலங்களுக்கு நடுவில் இருக்கிறது. கோயிலேச் சுற்றி ஒரு பொய்கை மாலே போட்டதுபோல் இருக்கிறது. நண்டு பூசித்து முத்தி பெற்ற தலம்.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1

## திருவியலூர்

சுவாமி ; யோகாநந்தநாதர் அம்பாள் : சாந்தநாயகி

இத்தலம் திருவிடைமருதூர் புகைவண்டி நிலயத்துக்கு வடக்கே நாலு கிலோ.மீட்டர் தூரத்தில் உள்ளது கும்பகோணத்திற்குக் கிழக்கே ஆறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பேருந்து வசதி உண்டு இலிங்க மூர்த்தியின் திருமுடியில் சடைகள் காணலாம். பிரமன் சிவராத்திரியில் இலிங்க மூர்த்தியினுள் புகுந்ததாக வரலாறு. கோயில் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## கொட்டையூர்

சுவாமி ; கோடீசுவரநாதர் அம்பாள் ; பந்தாடுநாயகி

கும்பகோணத்துக்கு மேற்கே சுவாமிமலை செல்லும் வழியில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இவ்வூர் ஒரு காலத்தில் ஆமணக்கங்காடாக இருந்தது. இறைவர் ஆமணக்கங்கொட்டைச் செடியின்கீழ் தோன்றியதால் இவ்வூர் கொட்டையூர் என்னும் பெயரைப்பெற்றது. சோழ மன்னனுக்கு ஒரு சிவலிங்கமே கோடி சிவலிங்கமாகக் காட்சி கொடுத்த தலம். இலிங்கத்தில் அநேக இலிங்கங்கள் காணப்படுகின்றன.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1.

## திருவின்னம்பர்

சுவாமி ; எழுத்தறிந்தநாதர்

அம்பாள் : பூங்கொம்புநாயகி – நித்யகல்யாணி

கும்பகோணத்திற்கு மேற்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது பேருந்து வசதி உண்டு. இறைவரை அகத்தியர் பூசித்ததாக வரலாறு.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, நாவுக்கரசர் 4, ஆக 5

## திருப்புறம்பயம்

சுவாமி : சாட்சிநாதர்
அம்பாள் ; கரும்படுசொல்லம்மை

கும்பகோணம் சுவாமிமலை வழியில் இன்னம்பூர்க்கு வடக்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கொள்ளிடநதி அருகில் ஓடுகின்றது. தற்காலம் திருப்புறம்பயத்திற்குப் பேருந்து வசதி உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருவிசயமங்கை

சுவாமி ; விசயநாதர் அம்பாள் : மங்கைநாயகி

கும்பகோணம் சுவாமிமலை பேருந்தில் இன்னம்பூர் இறங்கி திருப்புறம்பயம் வழியாகச் சென்றால் மேற்கே நாலு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கோயில் சிறியது. திருப்புறம்பயம் வரை பேருந்து வசதி உள்ளது.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருவைகாவூர்

சுவாமி : வில்வவனநாதர் அம்பாள் : வளைக்கைநாயகி

கும்பகோணத்திற்கு வடமேற்கில் பதினைந்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கொள்ளிடத்தின் தென்கரை. சிவராத்திரி விசேடம். வேடன் புலிக்குப் பயந்து இரவில் வில்வத்தால் வழிபட்டுக் காலையில் முத்தி அடைந்ததாக வரலாறு நந்தி திரும்பியிருக்கும் தலம். இயமனை அழிப்பதற்காக இறைவன் திரும்பியிருப்பதாக வரலாறு.

பதிகங்கள் சம்பந்தர் 1, ஆக 1

## திருவடகுரங்காடுதுறை

சுவாமி : குலைவணங்குநாதர்
அம்பாள் : அழகுசடைமுடியாள்

கும்பகோணத்திலிருந்து திருவையாறு போகும் வழியில் பதினெட்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. பேருந்து வசதி உண்டு. வாலி பூசித்த தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பழனம்

சுவாமி ; ஆபத்சகாயர் அம்பாள் ; பெரியநாயகி

திருவையாற்றுக்குக் கிழக்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சப்தஸ்தான க்ஷேத்திரத்தில் இரண்டாவது. விஷ்ணு சந்நிதி கோயிலினுள்ளே இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 5, ஆக 6

## திருவையாறு

சுவாமி ; செம்பொற்சோதிநாதர்
அம்பாள் : அறம்வளர்த்தநாயகி

தஞ்சாவூருக்கு வடக்கில் பத்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. நல்லவழி. பேருந்து வசதி எப்பொழுதும் உண்டு. திருநாவுக்கரசருக்குக் கயிலாய தரிசனம் கொடுத்தருளிய தலம். சப்தஸ்தானத் தலங்களுள் முதலாவது. ஆட்கொண்டார் சந்நிதி விசேடம். அப்பர் எழுந்த குளம் கோயிலுக்கு வடமேற்கில் இருக்கிறது.

பதிகங்கள் ; சம்பந்தர் 5, நாவுக்கரசர் 12,
சுந்தரர் 1, ஆக 18

## திருநெய்த்தானம்

சுவாமி ; நெய்யாடியப்பர் அம்பாள் ; வாலாம்பிகை

திருநெய்த்தானம் இது தில்லைத்தானம். திருவையாற்றுக்கு மேற்கே இரண்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது சரசுவதி வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 5, ஆக 6.

## திருப்பெரும்புலியூர்

சுவாமி : வியாக்கிரபுரிநாதர்

அம்பாள் ; சௌந்தரநாயகி

திருவையாற்றுக்கு மேற்கே நான்கு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சுவாமி இருக்கும் இடத்தில் உள்ள கல் தாமரைபோல் வட்டமாகப் போடப்பட்டு உள்ளது.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1.

## திருமழபாடி

சுவாமி ; வச்சிரத்தம்பநாதர் அம்பாள்; அழகாம்பிகை

திருவையாற்றுக்கு வடமேற்கில் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பங்குனி மாதத்தில் நந்திதேவருக்குத் திருமணம் இங்கு நடைபெறுகிறது. கொள்ளிடக்கரையில் இத்தலம் இருக்கிறது.

பதிகங்கள் ; சம்பந்தர் 3 நாவுக்கரசர் 2, சுந்தரர் 1, ஆக 6

## திருப்பழுவூர்

சுவாமி ; வடமூலநாதர் ; அம்பாள் ; அருந்தவநாயகி

அரியலூர் ரயில் நிலயத்திலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கானூர்

சுவாமி : செம்மேனிநாதர் அம்பாள் : சிவயோகநாயகி

பூதலூர் ரயில் நிலயத்துக்கு வடக்கே பத்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கொள்ளிடநதியின் கரையில் இருக்கின்றது. வீடுகளை மணல் மூடிவிட்டது. சுமார் 150 ஆண்டுகளுக்குமுன் கோயில் மட்டும் கண்டு பிடிக்கப்பட்டது. கோயில் பூமி மட்டத்துக்குத் தாழ்ந்துள்ளது.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1 ஆக 2

## திரு அன்பிலாலந்துறை

சுவாமி ; ஆலந்துறையீசனுர்
அம்பாள் : சௌந்தரியநாயகி

இத்தலம் லால்குடி ரயில் நிலயத்துக்குக் கிழக்கே நான்கு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. பிரமன் வழிபட்டதலம். இங்குச்செவிசாய்த்த விநாயகர்சந்நிதி விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரர் 1, ஆக 2

## திருமாந்துறை

சுவாமி : ஆம்பிரவனநாதர் அம்பாள் : அழகாம்பிகை

பிக்ஷாண்டார்கோயில் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கில் ஐந்து கிலோமீட்டர் தொலைவிலுள்ளது இத்தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1.

## திருப்பாற்றுறை

சுவாமி : திருமூலநாதர் அம்பாள் : மோகநாயகி

திருவெறும்பூர் ரயில் நிலயத்துக்கு ஆறு கிலோமீட்டர் தொலேவில் உள்ளது. இத்தலத்தில் சகஸ்ரநாம அர்ச்சனை செய்வது விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவானைக்கா

சுவாமி : சம்புகேசுவரர்

அம்பாள் : அகிலாண்டநாயகி

ஸ்ரீரங்கம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே ஒரு கிலோமீட்டர் தொலேவிலுள்ளது. சிலந்தியும் யானையும் வழிபட்ட தலம். அப்புஸ்தலம் கோயில் மிகவும் பெரியது மூலஸ்தானத்தில் எப்பொழுதும் நிரம்பியிருக்கின்ற தண்ணீரை நீக்கிய பின்னரே பூசை நடைபெறுகிறது. இத்தலத்தில் உள்ள திருநீற்ருன் திருமதில் காணவேண்டிய ஒன்று.

பதிகங்கள் : சப்பந்தர் 3, நாவுக்கரசர் 3, சுந்தரர் 1 ஆக 7.

## திருப்பைஞ்ஞீலி

சுவாமி ; நீலகண்டேசுவரர் அம்பாள் : விசாலாட்சி

மண்ணச்சநல்லூருக்கு மேற்கே இரண்டு கிலோமீட்டர் தொலேவிலுள்ளது. திருச்சியிலிருந்து மண்ணச்சநல்லூர் போகப் பேருந்து வசதியுண்டு. திருநாவுக்கரசருக்கு இறைவன் கட்டமுது கொடுத்த நளிய தோட்டமும் குளமும் தெற்கே ஒரு கிலோமீட்டர் தொலேவில் இன்றும் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 3.




## திருப்பாச்சிலாச்சிராமம்

சுவாமி. மாற்றறிவரதர் அம்பாள்: பாலசுந்தரி

பிச்சாண்டார்கோயில் ரயில் நிலயத்திலிருந்து 4 கிலோமீட்டர் தொலேவில் இருக்கிறது. திருஞான சம்பந்தர் கொல்லிமழவன் மகளது முயலகன்என்னும் நோயை நீக்கியருளிய தலம், நடராஜர் சர்ப்ப நடன மூர்த்தி. பாதத்தின் கீழ் சர்ப்பத்தின் உருவம் இருக்கின்றது.

பதிகங்கள்: சம்பந்தர் 1, சுந்தரர் 1. ஆக 2

## திருஈங்கோய்மலே

சுவாமி: மரகதமலேயப்பர்

அம்பாள்; மரகதவடிவம்மை

குழித்தலே ரயில் நிலயத்திற்கு வடமேற்கே மூன்று கிலோமீட்டர் தொலேவில் உள்ளது. இடையில் அகன்ற காவிரி உள்ளது. கோயில். குன்றின்மேல் இருக்கின்றது. கார்த்திகைச் சோமவாரத்தில் காலே கடம்பர் கோயிலேயும், நடுப்பகலில் இரத்தினகிரியை யும், மாலேயில் திருஈங்கோய் மலேயையும் தரிசித்தல் விசேடம். அகத்தியர் வழிபட்ட தலம்.

பதிகங்கள்; சம்பந்தர் 1, ஆக 1.



# காவிரித் தென்கரையில் உள்ள தலங்கள்

................

## திருவாட்போக்கி

சுவாமி ; இரத்தினகிரிநாதர்
அம்பாள் ; சுரும்பார்குழலி

இத்தலம் குழித்தலை ரயில் நிலயத்திற்குத் தெற்கு மணப்பாறை போகும் வழியில் ஒன்பது கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. கோயில் உயர்ந்த மலை மேல் உள்ளது. 952 படிகள் உள்ளன, இத் தலத்தில் உச்சிக்கால தரிசனம் விசேடம். மேற்குப் பார்த்த சந்நிதி. ஆரிய அரசனால் வெட்டப்பட்ட வாட் குறி இலிங்கத்தில் காணப்படுகின்றது. தலவரலாறு அச்சிடப்பட்டுள்ளது கிடைக்கும்.

பதிகங்கள் ; நாவுக்கரசர் 1, ஆக 1.

## திருக்கடம்பந்துறை

சுவாமி ; கடம்பவனநாதர்
அம்பாள் ; முற்றிலாமுலையம்மை

கடம்பர்கோயில்; இத்தலம் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே உள்ளது. குளித்தலை ரயில் நிலயத்தி லிருந்து வடமேற்கே இரண்டு கிலோமீட்டர் தொலை வில் உள்ளது இறைவன் சந்நிதி வடக்கு நோக்கி யுள்ளது. காவிரிநதி பக்கத்தில் ஓடுகிறது கண்ணுவ முனிவருக்கு இறைவர் கடம்ப விருட்சத்தில் தோன்றிக் காட்சிகொடுத்த தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருப்பராய்த்துறை

சுவாமி : பராய்த்துறைநாதர்
அம்பாள் ; பொன்மயிலாம்பிகை

எலமனூர் ரயில் நிலயத்திற்கு வடமேற்கில் இரண்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. இந்திரன் குபேரன் வழிபட்ட இடம். திருப்பராய்த்துறை என்றே தற்காலம் ரயில் நிலயம் உள்ளது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருக்கற்குடி

சுவாமி ; உச்சிவரதர் அம்பாள் ; அஞ்சனாட்சி

உய்யக்கொண்டான் திருச்சிராப்பள்ளிக்குத் தென் மேற்கில் நாலு கிலோமீட்டர் தொலையில் உள்ளது. கோயில் சிறிய மலையின்மேல் இருக்கின்றது. ஈழநாட்டரசன் உச்சிக்காலத்தில்வந்து வழிபட்டுமுத்திபெற்றத் தலம். கரன் வழிபட்ட தலம்,

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருமூக்கீச்சுரம்

சுவாமி : பஞ்சவர்ணநாதர் அம்பாள் ; காந்திமதிநாயகி

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. பிரமன் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1,

## திருச்சிராப்பள்ளி

சுவாமி ; தாயுமானசெல்வர்
அம்பாள் ; மட்டுவார்குழலி

ரயில் நிலயத்துக்கு அருகில் இருக்கிறது. திரிசிரன் என்ற அரக்கன் வழிபட்ட தலம். தட்சிண கயி

லாயம் என்ற பெயரும் உண்டு. மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் கோயில் இருக்கிறது. சைவ எல்லப்ப நாவலர் பாடிய தலபுராணம் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2.

### திருவெறும்பியூர்

சுவாமி ; எறும்பீசுவரர் அம்பாள் ; நறுங்குழல்நாயகி

திருவெறும்பூர் ரயில் நிலயம் உள்ளது. கோயில் குன்றின்மேல் இருக்கின்றது தேவர்கள். எறும்பு உருவம் எடுத்து வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருநெடுங்களம்

சுவாமி ; நித்தியசுந்தரர் அம்பாள் ; ஒப்பில்லாநாயகி

திருவெறும்பூர் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 10 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சோழகன் பட்டி ரயில் நிலயத்திலிருந்து 4 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. வங்கிய சோழராஜன் அருள் பெற்ற தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1,

### மேலைத்திருக்காட்டுப்பள்ளி

சுவாமி ; தியாகநாதர்

அம்பாள் ; வார்கொண்டமுலையாள்

திருக்காட்டுப்பள்ளி பூதலூர் ரயில் நிலயத்திலிருந்து வடக்கே 8 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. குடமுருட்டியாற்றின் தென்கரையில் இருக்கிறது. இந்தத் தலத்தில்தான் காவிரியினின்றும் குடமுருட்டி ஆறு பிரிகின்றது. இறைவன் வெப்பம் தணித்தருளியதாக வரலாறு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருவாலம்பொழில்

சுவாமி : ஆத்மநாதர் அம்பாள் : ஞானம்பிகை

தஞ்சாவூருக்கு வடக்கே 10 கிலோமீட்டர் தொலைவி லுள்ளது திருப்பூந்துருத்திக்குச் சமீபம். அட்டவசுக் கள் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருப்பூந்துருத்தி

சுவாமி : புஷ்பவனநாதர் அம்பாள் : அழகார்ந்தநாயகி

இத்தலம் திருவையாற்றுக்குத் தென்கிழக்கில் 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சோழமன்னன் துருத்தியைவைத்து வழிபட்ட தலம். நந்திகள் விலகி யிருக்கின்றன. அப்பர் இங்குத்திருமடம் கட்டிக்கொண் டிருந்தார். அந்த மடம் இப்பொழுது செப்பஞ் செய் யப்பட்டு இருக்கிறது. சப்தஸ்தானத் தலங்களில் இது ஆருவது தலம் அழகிய சோலைகள்சூழ்ந்த தலம்.
பதிகங்கள் : நாவுக்கரசர் 3, ஆக 3

## திருக்கண்டியூர்

சுவாமி : வீரட்டநாதர் அம்பாள் : மங்களநாயகி

தஞ்சாவூருக்கு வடக்கே 9 கிலோமீட்டர் தூரத்தி லுள்ளது. திருவையாறு போகும் வழியில் இருக் கிறது. மாசிமாதம் 13. 15 தேதிகளில் சூரியபூஜை. அட்டவீரட்டத் தலங்களில் ஒன்று. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1 நாவுக்கரசர் 1, ஆக 2.

## திருச்சோற்றுத்துறை

சுவாமி ; தொலையாச்செல்வநாதர்
அம்பாள் ; ஒப்பிலாம்பிகை

திருவையாற்றுக்குக் கிழக்கில் 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சோறு அளித்த தலம். ஊருக்குத் தெற்கே சோறுடையான் வாய்க்கால் ஓடுகின்றது. அன்னம் அளித்த வயல் என்ற பெயரில் ஒரு வயல் சந்நிதிக்கெதிரே இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 4, சுந்தரர் 1 ஆக 6

## திருவேதிகுடி

சுவாமி : வேதபுரிநாதர் அம்பாள் ; மங்கையர்க்கரசி

வேதிகுடி தஞ்சாவூருக்குத் தென்கிழக்கில் 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. வேதங்கள் வழி பட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருத்தென்குடித்திட்டை

சுவாமி : பசுபதிநாதர் அம்பாள் : உலகநாயகி

திட்டை ரயில் நிலயத்திலிருந்து 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது, கோயில் சிறியது, இரண்டு ஆற்றுக்கும் இடையில் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருப்புள்ளமங்கை

சுவாமி : பசுபதிநாதர் அம்பாள் : பல்வளைநாயகி

பசுபதிகோயில் ரயில் நிலயத்திற்கு வடமேற்கில் 2 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. தேவர்கள் வேண்ட விடமுண்ட பெருமான் உள்ள தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1 ஆக 1

## திருச்சக்கரப்பள்ளி

சுவாமி : ஆலந்துறைநாதர்
அம்பாள் : அல்லியங்கோதை

அய்யம்பேட்டை ரயில் நிலயத்திற்கு மேற்கே 2 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. சயந்தன் வழிபட்ட தலம் கோயில்மட்டும் இருக்கிறது. சப்தஸ்தானத் தலங்களுள் இதுவும் ஒன்று.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கருகாவூர்

சுவாமி : முல்லைவனநாதர்
அம்பாள் : கரும்பன்னநாயகி

திருக்களாவூர் அய்யம்பேட்டை ரயில் நிலயத் துக்கு தென்கிழக்கில் 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. வெட்டாற்றின் கரையில் இருக்கின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருப்பாலைத்துறை

சுவாமி : பாலைவனநாதர்
அம்பாள் : தவளவெண்ணகையாள்

இத்தலம் பாபநாசம் ரயில் நிலயத்துக்கு தெற்கே 2 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. தாருகாவனத்து

முனிவர்கள் ஏவிய புலியை உரித்துத் தரித்த தலம். அம்மையார் சந்நிதி தனியே இருக்கிறது. சந்நிதி விசேடமானது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருநல்லூர்

சுவாமி : பெரியவாண்டவர் அம்பாள் ; பருவதசுந்தரி

சுந்தரப்பெருமாள் கோயில் ரயில் நிலயத்துக்குத் தெற்கே 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருநாவுக்கரசருக்குத் திருவடிசூட்டியருளிய தலம். அமர்நீதி நாயனாரைச் சிவபெருமான் ஆட்கொண்ட தலம். மாடக்கோயில் மலைபோல் உயர்ந்த இடத்தில் இருக்கிறது. சப்தசாகர தீர்த்தம். சுவாமி பொன்வண்ணமாயிருக்கின்றார். நாள்முழுதும் ஐந்து வண்ணமாகக் காட்சி கொடுக்கின்றார். இலிங்கத்தில் துவாரங்கள் காணப்படுகின்றன. பிருங்கி வழிபட்ட தலம். இத்தலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 3, நாவுக்கரசர் 2, ஆக 5

## திருவாவூர்ப்பசுபதீச்சரம்

சுவாமி : பசுபதிநாதர் அம்பாள் : மங்களநாயகி

இத்தலம் தாராசுரம் ரயில் நிலயத்திற்குத் தென்மேற்கில் 8 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கும்பகோணத்தில் இருந்து பட்டீஸ்வரம் பேருந்து வசதி உண்டு. அங்கிருந்தும் இத்தலத்திற்குச் செல்லலாம். தட்சிணாமூர்த்தி உருவம் பார்க்க வேண்டியது,

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருச்சத்திமுற்றம்

சுவாமி ; சிவக்கொழுந்துநாதர்
அம்பாள் : பெரியநாயகி

தாராசுரம் ரயில் நிலயத்திற்கு தென்மேற்கே 3 கிலோமீட்டர் தூரம்சென்ருல் இத்தலத்தை அடையலாம். இறைவி சுவாமியைத்தழுவி முத்தங்கொடுத்த தலம். அந்த உருவமும் கோயிலில் காணப்படுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பட்டீச்சுரம்

சுவாமி ; பட்டீசுவரநாதர் அம்பாள் ; பல்வளைநாயகி

தாராசுரத்துக்குத் தென்மேற்கில் 5 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. திருஞானசம்பந்தருக்கு முத்துப்பந்தல் கொடுத்த தலம். திருச்சத்திமுற்றமும் இவ்வூரிலேயே உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பழையாறைவடதளி

சுவாமி ; சோமநாதர், வடதளிநாதர்
அம்பாள் ; சோமகலைநாயகி, கௌரியம்மை

இத்தலம் பழையாறை, வடதளி என்று இரண்டு தலங்களாக இருக்கின்றது. பட்டீச்சரத்திலிருந்து 4 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. கோயில் மாடக்கோயில். கோயில் மேட்டின்மேல் இருக்கிறது. இடையில் திருமலைராயன் ஆறு ஓடுகின்றது. அமர்நீதி நாயனர் வாழ்ந்த பதியாகும்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருவலஞ்சுழி

சுவாமி ; கபர்த்திசா                    அம்பாள் ; பெரியநாயகி

சுவாமிமலை ரயில் நிலயத்திலிருந்து 1 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. இந்திரன் வழிபட்ட தலம். வெள்ளை விநாயகர் மண்டபம் மிக்க வேலைப்பாடு உடையது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதியும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 3, நாவுக்கரசர்: 2, ஆக 5

## திருக்குடமூக்கு (கும்பகோணம்)

சுவாமி ; கும்பேசர்                    அம்பாள் ; மங்களநாயகி

ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது ஏமரிஷி பூசித்த தலம் மாசிமகம் விசேஷம், கோயில் மிகப்பெரியது. சுவாமி கும்பம்போன்ற வடிவினர். மங்களாம்பாள் சந்நிதி விசேடமானது. ஊருக்கு நடுவில் கோயில் உள்ளது

பதிகங்கள்: சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## குடந்தைக் கீழ்க்கோட்டம்

சுவாமி ; நாகேசர்                    அம்பாள் ; தேனூர்மொழியாள்

குடந்தைநகரின் நடுவிலுள்ள நாகேச்சுரசுவாமி கோயில். கோயில் பெரியது. சூரியன் வழிபட்ட தலம். சித்திரை 11. 12, 13 நாட்களில் காலையில் சூரிய ஒளி இறைவன்மேல் விழும். இத்தலத்தில் நடராஜர் சந்நிதி மிகவும் சிறப்புடையது. சிறந்த சிற்பங்கள் பல உள்ள திருக்கோயில்.

பதிகங்கள்: நாவுக்கரசர் 1, ஆக 1.

## திருக்குடந்தைக்காரோணம்

சுவாமி : சோமநாதர் அம்பாள் : தேனார்மொழியாள்

காசி விஸ்வநாதர் கோயில். மகாமகக்குளத்தின் வடகரையில் இருக்கிறது. நவநதிகளும் நவகன்னிகைகளாக வழிபட்ட தலம். ரயில் நிலயத்திற்கு அண்மையிலும் மகாமகத் தீர்த்தத்தின் கரையிலும் உள்ளது. காணவேண்டிய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1. ஆக 1.

## திருநாகேச்சுரம்

சுவாமி : சண்பகாரணியர் அம்பாள் ; குன்றமுலைநாயகி

ரயில் நிலயத்திற்கு தென்கிழக்கே 2 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது சேக்கிழார் தங்கி வழிபட்ட தலம். சேக்கிழார் திரு உருவம் கோயிலுள் தனியே இருக்கிறது. நெசவுக்குப் பெயர்பெற்ற ஊர்,

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 3, சுந்தரர் 1, ஆக 6

## திருவிடைமருதூர்

சுவாமி: மகாலிங்கம் அம்பாள்: பெருநலமுலையம்மை

இக்கோயில் ரயில் நிலயத்துக்கு வடக்கே இருக்கிறது. ரயிலைவிட்டு இறங்கியதும் கோபுரம் காட்சி அளிக்கும், இத்தலத்தில் தைப்பூசம் விசேடம்- இறைவன் சந்நிதி மிக நீளமாயும் அழகாகவும் அமைந்துள்ளது. கிழக்குக் கோபுரவாயிலில் பட்டினத்தார் மேற்குக் கோபுரவாயிலில் பத்திரகிரியார் திருவுருவங்கள் உள்ளன. மூகாம்பிகையின சந்நிதி அம்மன்கோயிலுக்குச் செல்லும் வழியில் தனியாக இருக்கிறது. தல புராணம் அச்சிடப்பட்டுள்ளது. வைகாசி வசந்த விழாவும் தைப்பூசத் திருவிழாவும், அறுபத்துமூவர்

விழாவும் சிறப்பாக நடைபெறுகின்றன. இத்தலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது.

பதிகங்கள் ; சம்பந்தர் 6, நாவுக்கரசர் 5, சுந்தரர் 1, ஆக 12

## திருத்தென்குரங்காடுதுறை

சுவாமி; ஆபத்சகாயர் அம்பாள்; பவளக்கொடிநாயகி

ஆடுதுறை ரயில் நிலயத்திற்குச் சமீபமாயுள்ளது. சுக்கிரீவன் வழிபட்ட தலம் பழமையான கோயில்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருநீலக்குடி

சுவாமி ; நீலகண்டநாதர் அம்பாள் ; அழகம்மை

இத்தலம் ஆடுதுறை ரயில் நிலயத்துக்கு தெற்கே 5 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது தேவி சந்நிதிகள் இரண்டு இத்தலத்தில் உள. நல்லெண்ணெய் அபிஷேகம் செய்தால் பாதி இலிங்கத்தில் சுவறிவிடும். எண்ணெய் ஆட்டும் கல்செக்கு கோயிலின் வெளியே காணப்படுகிறது. இத்தலம் திருவாவடுதுறை ஆதினத்துக்குச் சொந்தமானது, திருவிடைமருதூர்ப் பெருங்கோயில் திருவாகக்குழு இக்கோயிலில் கூடிக் கோயில் காரியங்களை முடிவுசெய்யும் என்று திருவிடைமருதூர்க் கல்வெட்டில் காணப்படுகிறது

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருவைகன்மாடக்கோயில்

சுவாமி ; வைகல்நாதர் அம்பாள் ; வைகல்மங்கை

ஆடுதுறை ரயில் நிலயத்துக்குத் தென்கிழக்கில் 8 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருநல்லம்

சுவாமி ; உமாமகேசுவரர் அம்பாள் ; மங்களநாயகி

கோனேரிராசபுரம், ஆடுதுறை ரயில் நிலயத்திற்கு 8 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. பேருந்து வசதி உண்டு. நடராசர் திருவுருவம் மிகப் பெரியது; விசேடம். நடராஜர், இருந்த இடத்திலேயே காட்சி நல்குகிருர். திருவுருவத்தின்மேல் முடி வளர்ந்திருப்பதாக வரலாறு

பதிகங்கள் ; சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருக்கோழம்பம்

சுவாமி ; கோகிலேசுவரர் அம்பாள் ; சௌந்தரநாயகி

நரசிங்கன்பேட்டை ரயில் நிலயத்திற்குத் தென் கிழக்கில் 3 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. பசுவின் குளம்புபட்ட வடு இறைவனது உச்சியில் காணப்படுகிறது,

பதிகங்கள் ; சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருவாவடுதுறை

சுவாமி ; மாசிலாமணிநாதர்
அம்பாள் ; ஒப்பிலாமுலையாள்

நரசிங்கன்பேட்டை ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 2 கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது. திருமூலர் திருமாளிகைத்தேவர் வாழ்ந்தபதி. சொர்ணத் தியாகரைத் தரிசிப்பது விசேடம். கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் திருமூலர் சந்நிதி இருக்கிறது. திருஞானசம்பந்தர் பொற்கிழி பெற்ற தலம். உமாதேவியார் பசுவடிவுடன் பூசித்த காரணத்தால் ஆவடுதுறை

என்ற பெயர் அமைந்தது. திருவாவடுதுறை ஆதீனத் திருமடாலயம் உள்ள தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 5, சுந்தரர் 2
ஆக 8

## திருத்துருத்தி

சுவாமி : உத்தரவேதீசுவரர்

அம்பாள் : மிருதுமுகிழாம்பிகை

குத்தாலம் ரயில் நிலயத்திற்கு வடகிழக்கே 2 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. சுந்தரரின் உடற் பிணி தீர்த்த தலம். தீர்த்தத்துக்கு வடமேற்குக் கரையில் சுந்தரர் ஆலயம் இருக்கிறது. சீகாழி கும்பகோணம் பேருந்து வழியில் உள்ள தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1
ஆக 3

## திருவழுந்தூர்

சுவாமி : வேதபுரிநாதர் அம்பாள் : சௌந்தரநாயகி

தேரழுந்தூர் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 2 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. மாடக்கோயில். மேற்குப் பார்த்த சந்நிதி, பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் சம்பந்தர் 1, ஆக 1

## திருமயிலாடுதுறை

சுவாமி : மாயூரநாதர் அம்பாள் : அஞ்சநாயகி

நகர ரயில் நிலயத்துக்கு வடக்கே 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. உமையம்மையார் மயிலாக இருந்து இறைவனை வழிபட்ட தலம். இதனால் இத்தலம் கௌரி மாயூரம் என்னும் பெயரினைப்பெறும்.

ஐப்பசி மாதத்தில் இடபதீர்த்தத் துறையுள்ள காவிரி நதியில் நீராடுவது விசேடம். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது இத்தலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. தல வரலாறும் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, ஆக 3

## திருவிளநகர்

சுவாமி: துறைகாட்டுவள்ளல் அம்பாள்: தோழிநாயகி

மன்னம்பந்தல் ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ஆறுமுகக்கடவுள் திருவுருவம் அழகாக இருக்கிறது. மயிலாடுதுறையிலிருந்து பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பறியலூர்வீரட்டம்

சுவாமி : வீரட்டநாதர்
அம்பாள் ; இளங்கொம்பனையாள்

பரசலூர் என்று வழங்கப்படுகிறது. செம்பொனார் கோயில் ரயில் நிலயத்திலிருந்து 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அட்ட வீரட்டங்களில் ஒன்று. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருச்செம்பொன்பள்ளி

சுவாமி ; சுவர்ணபுரிநாதர்
அம்பாள் ; சுகந்தவனநாயகி

இத்தலம் செம்பொனார்கோயில் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

இந்திரனும், குபேரனும் வழிபட்ட தலம். தலபுராணம் உள்ளது

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

## திருநனிபள்ளி

சுவாமி : நற்றுணையப்பர்

அம்பாள் ; பருவதராஜபுத்திரி

புஞ்சை, செம்பொனார்கோயில் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது வழியில் திருச்செம்பொன்பள்ளி இருக்கிறது. திருஞானசம்பந்தருடைய தாயார் பிறந்த தலம். திருநனிபள்ளி கோடிவட்டம் வரலாற்றுச் சிறப்புடையது. தந்தையார் தோள்மேலிருந்து சம்பந்தர் பதிகம்பாடிய தலம். பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 3

## திருவலம்புரம்

சுவாமி ; வலம்புரிநாதர்

அம்பாள் : வடுவகிர்க்கண்ணி

பெரும்பள்ளம், சிகாழி காவிரிப்பூம்பட்டினம் வழியில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. பிச்சாடனமூர்த்தி உருவம் விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, சுந்தரர் 1 ஆக 4

## திருத்தலைச்சங்காடு

சுவாமி ; சங்கருணாதர் அம்பாள் ; சௌந்தரநாயகி

ஆக்கூர் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கு 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு.

கோயில் கட்டு மலைமேல் இருக்கிறது. திருமால் வழி ராட்டுச் சங்கம்பெற்ற தலம். சீகாழியிலிருந்து பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவாக்கூர்

சுவாமி ; சுயம்புநாதர் அம்பாள் ; கட்கநேத்திரி

ரயில் நிலயத்திற்கு வடக்கே 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. மாடக்கோயில், சிறப்புலிநாய னார் தோன்றியஇடம் முன்பு வேளாளர்கள் நிறைந்து இருந்த இடம். மயிலாடுதுறையிலிருந்து பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருக்கடவூர்வீரட்டம்

சுவாமி ; அமுதகடநாதர் அம்பாள் : அபிராமியம்மை

ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. கோயில் பெரியது. மேற்குப் பார்த்த சந்நிதி. காலஸம்ஹார மூர்த்தி சந்நிதி விசேடம். குங்கிலியக்கலய நாயனாரும் காரிநாயனாரும் வாழ்ந்து முத்திபெற்றதலம். அபிராமி யம்மன் சந்நிதி விசேடசிறப்பினையுடையது. பேருந்து வசதியும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 3, சுந்தரர் 1 ஆக 5

## திருக்கடவூர்மயானம்

சுவாமி ; பிரமபுரிநாதர்

அம்பாள் ; மலர்க்குழன்மின்னம்மை

இத்தலம் திருமெய்ஞ்ஞானம் என வழங்கப்படு கின்றது சீகாழி திருக்கடையூர்பேருந்து வசதி உண்டு. திருக்கடையூரிலிருந்து 2 கிலோமீட்டர் தூரத்தில்

உள்ளது. மணல்வழி. கோயிலுக்குச் சற்று தூரத்தில் கிணறு ஒன்று இருக்கிறது. பங்குனி மாதம் சுக்கில பட்ச அசுவதி நட்சத்திரத்தில் நீராடுவது விசேஷம். அமிர்தகடேசருக்குத் திருமஞ்சனம் செய்வதைத் தவிர வேறு எதற்கும் இக்கிணற்று நீரை உபயோகிப்பதில்லை

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருவேட்டக்குடி

சுவாமி ; திருமேனியழகர் அம்பாள் ; சாந்தநாயகி

காரைக்கால் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கு 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அருச்சுனனுக்கு வேடரூபமாகத் தோன்றி அருள் வழங்கிய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருத்தெளிச்சேரி

சுவாமி ; பார்வதிநாதர் ; அம்பாள் ; சத்தியம்மை

கோயிற்பத்து. காரைக்கால் ரயில் நிலயத்துக்கு மேற்கே 1 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சிறிய கோயில். புத்த நந்திமேல் இடி விழுந்த தலம். பங்குனி 13தேதிக்குமேல் 10 நாட்களுக்குச் சூரியக் கிரணங்கள் சுவாமி மேல் விழுகின்றன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருத்தருமபுரம்

சுவாமி : யாழ்மூரிநாதர்

அம்பாள் : மதுரமின்னும்பிகை

காரைக்கால் ரயில் நிலயத்துக்கு மேற்கே 1 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருஞானசம்பந்தர் யாழ்முரிப் பதிகம் பாடியருளியதலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருநள்ளாறு

சுவாமி : தர்ப்பாரணிய நாதர்

அம்பாள் : போகமார்த்தபூண்முலையாள்

இத்தலம் காரைக்கால் ரயில் நிலயத்துக்கு மேற்கே 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. விடங்கத்தலம் ஏழனுள் இதுவும்ஒன்று. நகரவிடங்கத்தியாகர். உன் மத்த நடனம். நளன் வழிபட்டதலம். வடமேற்கே நளதீர்த்தம் இருக்கிறது. சனிபகவான் சந்நிதி விசேடம். சனிப்பெயர்ச்சி விசேடமாகக் கொண்டாடப் படுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 4, நாவுக்கரசர் 2, சுந்தரர் 1 ஆக 7.

## திருகோட்டாறு

சுவாமி : அயிராவதநாதர்

அம்பாள் : வண்டமர்பூங்குழலி

அம்பகரத்தூர் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கு 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது தற்காலம் திருக் கொட்டாரம் என வழங்குகிறது.

பதிகங்கள் : சம்பந்தர்2 , ஆக 2

## திருவம்பர்

சுவாமி ; பிரமபுரிநாதர் அம்பாள் ; பூங்குழனுயகி

பூந்தோட்டம் ரயில் நிலயத்திற்குத் தென்கிழக்கில் 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சோமாசிமாற நாயனுர் முத்தியடைந்த தலம். மாடக்கோயில்.

பதிகங்கள் : சம்பந்தர்1 , ஆக 1

## திருவம்பர்மாகாளம்

சுவாமி ; காளகண்டேசுவரர் அம்பாள் ; பக்ஷநாயகி

கோயில் திருமாகாளம் என்றும் பெயர். பேரளம் ரயில் நிலயத்துக்குத் தென்கிழக்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. யாக உற்சவம் வைகாசியில் விசேஷம்.

பதிகங்கள் ; சம்பந்தர் 3, ஆக 3

## திருமீயச்சூர்

சுவாமி ; முயற்சிநாதர் அம்பாள் : சுந்தரநாயகி

பேரளம் ரயில் நிலயத்திற்கு மேற்கே 2 கிலோ மிட்டர் தூரத்தில் உள்ளது. சூரியன் வழிபட்ட தலம், கோயில் விமானம் யானை இருப்பதுபோல் இருக்கிறது தேவியார் இருந்த திருக்கோலம் காணவேண்டியது. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருமீயச்சூர் இளங்கோயில்

சுவாமி : சகலபுவனேசுவரர்
அம்பாள் ; மின்னுமேகலையாள்

இது மீயச்சூர் கோயில் சுவாமி சந்நிதிக்கு வட புறமாக இருக்கிறது. திருமீயச்சூர் இறைவனைப் பாலா லயம் செய்திருந்த காலத்துப்பாடல்பெற்ற சந்நிதி. காளி பூசித்த தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருத்திலதைப்பதி

சுவாமி ; முத்தீசர் அம்பாள் ; பொற்கொடி நாயகி

திலதர்ப்பணபுரி, பூந்தோட்டம் ரயில்நிலயத்திற்கு மேற்கே 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

இங்கு பிதுர் தொர்ப்பணம், சிரார்த்தம் செய்வது விசேஷம்.

பதிகங்கள் . சம்பந்தர் 1. ஆக 1

## திருப்பாம்புரம்

சுவாமி ; பாம்புரநாதர்

அம்பாள் ; வண்டார் பூங்குழலி

பேரளம் ரயில் நிலயத்திற்கு மேற்கே 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. வழியில் திருமீயச்சூர் இருக்கிறது. நாகராஜன் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருச்சிறுகுடி

சுவாமி ; மங்களநாதர் அம்பாள் ; மங்களநாயகி

பேரளம் ரயில் நிலயத்திற்கு மேற்கே 1 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது, செவ்வாய் வழிபட்டதலம் திருவீழிமிழலை அண்மையில் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவீழிமிழலை

சுவாமி : வீழியழகர் அம்பாள் : சுந்தரகுசாம்பிகை

பூந்தோட்டம் ரயில் நிலயத்திலிருந்து 9 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. ஆடுதுறை ரயில் நிலயத்திலிருந்தும் செல்லலாம். பேருந்து வசதி உண்டு திருமால் தனது கண்ணை இடந்து அப்பிச்சக்கரப்பெற்ற தலம். ஊர், சோலைகள் சூழ்ந்த வளமுடையது. கோயில் ஊர்நடுவே பெரிதாக அமைந்துள்ளது இக்கோயிலில் உள்ள வௌவால்

நற்றி மண்டபம் வரலாற்றுத் தொடர்புடையது. மாப்பிள்ளைச்சாமியின் கோலம் கண்டுகளிக்க வேண்டியது வடக்குவீதி கீழ்க்கோடியில் சம்பந்தர் ஆலயமும், மேல் கோடியில் அப்பர் ஆலயமும் தனியே இருக்கின்றன. இத்தலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. சித்திரையில் திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 14, நாவுக்கரசர் 8 சுந்தரர் 1
ஆக 23

## திருவன்னியூர்

சுவாமி : அக்கினிசுவரர் அம்பாள் : பார்வதிதேவி

திருவீழிமிழலைக்கு வடமேற்கே 14 கிலோ மீட்டர் தூரத்தில்உள்ளது. அக்கினி வழிபட்டதலம் கோயில் மிகவும் சிறியது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருக்கருவிலி

சுவாமி ; சற்குணநாதர் அம்பாள் : சர்வாங்கநாயகி

இத்தலம் ஆடுதுறை ரயில் நிலயத்திலிருந்து 12 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கிழக்கே சென்றால் அடையலாம். கோனேரிராஜபுரம் (திருநல்லம்) வரை பேருந்து வசதியுண்டு சற்குணன் என்னும் மன்னன் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். 'கொட்டிட்டை' என்றுவேறுபெயர் இவ்வாலயத்துக்கு உண்டு.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருப்பேணுபெருந்துறை

சுவாமி : சிவானந்தநாதர் அம்பாள் : மலையரசி

திருப்பந்துறை. கும்பகோணத்துக்குத் தென் கிழக்கே 12 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சிவ சக்தி பிரமன் வழிபட்ட தலம். வன்னி விருட்சம் கோயிலின் எதிரில் உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருநறையூர்ச்சித்தீச்சரம்

சுவாமி ; சித்தநாதர் அம்பாள் : அழகாம்பிகை

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சித்தர்கள் வழிபட்டதலம் கோயில் மிகவும் பெரியது.

பதிகங்கள் : சம்பந்தர் 3, சுந்தரர் 1, ஆக 4

## திருவரிசிற்கரைப்புத்தூர்

சுவாமி ; படிக்காசு வைத்த பரமர்
அம்பாள் : அழகம்மை

அழகார்புத்தூர் என்று வழங்கப்படுகின்றது கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 7 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. நல்லவழி. புகழ்த்துணை நாயனர் முத்தி அடைந்த தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 3

## திருச்சிவபுரம்

சுவாமி : பிரம்மபுரிநாதர் அம்பாள் ; பெரியநாயகி

இத்தலம் கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி

உண்டு. திருமால் வராகமாய் வழிபட்ட தலம். நடராசர் திருமேனி காணவேண்டியது.

பதிகங்கள் : சம்பந்தர் 3, நாவுக்கரசர் 1, ஆக 4.

## திருக்கலயநல்லூர்

சுவாமி : அமிர்தகலை நாதர் அம்பாள் ; அமிர்தவல்லி

சாக்கோட்டை, கும்பகோணத்திற்குத் தென் கிழக்கு 5 கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. பேருந்து வசதி உண்டு. அரிசில் ஆற்றின் தென்கரையில் ஆலயம் உள்ளது. கோயில் மிகவும் சிறியது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்கருக்குடி

சுவாமி : சற்குணநாதர்

அம்பாள் ; சர்வாலங்கிருதமின்னும்பிகை

மருதாநல்லூர், கும்பகோணத்திற்குத் தென் கிழக்கே 6 கிலோமீட்டர் தூரத்தில்உள்ளது. பேருந்து வசதி உண்டு. மணல் இலிங்கம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவாஞ்சியம்

சுவாமி : வாஞ்சியநாதர் அம்பாள் ; வாழவந்தநாயகி

நன்னிலம் ரயில் நிலயத்திற்கு மேற்கே 9 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. திருவை திருமால் வாஞ்சித்த இடம் தீர்த்தம் குப்தகங்கை கார்த்திகை மாதம் ஞாயிற்றுக்கிழமைகளில் நீராடுவது விசேடம். இத்தலத்தில் இறப்பவர்க்கு இயமவாதனை இல்லை. பிள்ளைப்பேறு இல்லாதோர் இன்றும் நீராடி வழிபட்டு

அக்குறை நீங்கப் பெறுகிறார்கள். அமாவாசையில் தீர்த்தமாடுவது விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 3

## திருநன்னிலத்துப்பெருங்கோயில்

சுவாமி : பிரகேசுவரர் அம்பாள் ; பிரகேசுவரி

இரயில் நிலயத்துக்கு மேற்கில் 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. வழியில் திருக்கொண்டீச்சரம் என்ற தலம் இருக்கிறது. மதுவனம் என்ற வேறு பெயரும் இத்தலத்திற்கு உண்டு. சுவாமி சந்நிதி கட்டுமலைமேல் இருக்கிறது. பெருங்கோயில்களுள் ஒன்று. கோச்செங்கணான் திருப்பணி செய்த தலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்கொண்டீச்சரம்

சுவாமி ; பசுபதிநாதர் அம்பாள் : சாந்தநாயகி

நன்னிலம் ரயில் நிலயத்துக்கு மேற்கே 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கோயிலைச் சுற்றி மாலை போல் அகழி இருக்கின்றது. இறைவி பசுவாகி வழிபட்ட தலம். பசுவின் கொம்பு பட்ட வடு இலிங் கத்தின் உச்சியில் காணப்படுகிறது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 2, ஆக 2

## திருப்பனையூர்

சுவாமி : சௌந்தரநாதர் அம்பாள் ; பெரியநாயகி

திருவாரூருக்கு வடக்கே 10 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இறைவன் சுந்தரருக்குத் திருக்கூத்தோடு காட்சி கொடுத்தருள, அவர் மாடமாளிகை என்னும் பதிகம் பாடி வழிபட்ட தலம். கோயிலுள்

பனை விருட்சம் இரண்டு இருக்கின்றன. இவ்வூருக்கு வடக்கே 4 கிலோமீட்டர் தூரத்தில் திருப்புகலூர் இருக்கின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருவிற்குடிவீரட்டம்

சுவாமி : வீரட்டநாதர் அம்பாள் : ஏலவார்குழலி

விற்குடி ரயில் நிலயத்திலிருந்து 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அட்டவீரட்டத்துள் ஒன்று. வண்டி வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்புகலூர்

சுவாமி: அக்னிசுவரர் அம்பாள் : கருந்தார்க்குழலி

இத்தலம் நன்னிலம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அக்னி பூசித்த தலம். நன்னிலத்திலிருந்து கோயிலுக்குப் பேருந்து வசதி உண்டு. கோபுரம் பெரியது. தென்புறம் தவிர ஏனைய பக்கங்களில் அகழியுண்டு இறைவன் உருவம் மாருகச் சற்று சாய்ந்து காணப்படுகின்றது. அதனுல் கோணப்பிரான் என்ற திருநாமமும் உண்டு. திருநாவுக்கரசர் முத்திபெற்ற தலம். வாதாபிகணபதி சந்நிதி விசேடம். சித்திரைச் சதயத்தில் சென்று தெரிசிப்பது விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 5, சுந்தரர் 1, ஆக 8

## திருப்புகலூர்வர்த்தமானிச்சரம்

சுவாமி : வர்த்தமானிசர்

அம்பாள் : கருந்தார்க்குழலி

திருப்புகலூர் ஆலயத்துள் வடபுறமாக இருக்கிறது. முருக நாயனுர் திருவுருவமும் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவிராமனதீச்சரம்

சுவாமி : இராமலிங்கேசர்

அம்பாள் : சரிவார்க்குழலி

இராமனதீச்சரம். நன்னிலம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது இராமர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1. ஆக 1

## திருப்பயற்றூர்

சுவாமி ; பயற்றூர்நாதர் அம்பாள் : காவியங்கண்ணி

இத்தலம் விற்குடி ரயில் நிலயத்திலிருந்து 10 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கிழக்கே செல்ல வேண்டும். இடையில் திருவிற்குடி உள்ளது. பைரவ முனிவர் பூசித்த தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருச்செங்காட்டங்குடி

சுவாமி : கணபதியீசுவரர்

அம்பாள் ; திருக்குழன்மாது

நன்னிலம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 8 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. விநாயகர் வழிபட்டதலம் அசுரனது இரத்தம் பெருகிச் செங்காடாய் இருந்தமையால் செங்காட்டங்குடி எனப் பெயர் பெற்றது. கணபதீச்சரம் என்னும் பெயரும் உண்டு. சிறுத்தொண்டர் தோன்றிய தலம். தெற்குவீதியில் நாயனார் மடம் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, ஆக 3

## திருமருகல்

சுவாமி : மாணிக்கவண்ணர்

அம்பாள் : வண்டுவார்குழலி

இத்தலம் நன்னிலம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. இதற்கு வடகிழக்கே 2 கிலோ மீட்டர் தூரத்தில் திருச்சாத்தமங்கை உள்ளது. விடந் தீண்டிய செட்டிப் பிள்ளையைத் திருஞானசம்பந்தர் தேவாரம்பாடி உயிர்ப்பித்த தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, ஆக 3

## திருச்சாத்தமங்கை

சுவாமி : அயவந்திநாதர்

அம்பாள் : மலர்க்கண்ணம்மை

திருநள்ளாற்றுக்குத் தென்மேற்கே 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. திருநீலநக்கநாயனருடைய தலம். இதிலிருந்து 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது திருமருகல்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருநாகைக்காரோணம்

சுவாமி : காயாரோகணேசர் அம்பாள் : நீலாயதாட்சி

நாகப்பட்டினம் ரயில் நிலயத்துக்கு அருகிலுள்ளது ஸப்தவிடங்கத் தலம். சுந்தரவிடங்கர். அதிபத்த நாயனர் தோன்றிய தலம். நீலாயதாட்சி அம்மன் சந்நிதி விசேட சிறப்புடையது. திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் மீனட்சி சுந்தரம்பிள்ளை பாடிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 4, சுந்தரர் 1, ஆக 7

## திருச்சிக்கல்

சுவாமி ; நவநீதநாதர் அம்பாள் : வேல்நெடுங்கண்ணி

ரயில் நிலயத்திலிருந்து 1 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது சந்நிதி கட்டுமலைமேல் இருக்கிறது. சிங்காரவேலர் சந்நிதி விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கீழ்வேளூர்

சுவாமி : அக்ஷயலிங்கேசுவரர்
அம்பாள் : வனமுலைநாயகி

ரயில் நிலயத்திற்கு அருகில் உள்ளது. சந்நிதி கட்டுமலைமேல் இருக்கிறது. கருங்கல் வேலை. இது ஒரு அரிய திருப்பணி. பேருந்து வசதியும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருத்தேவூர்

சுவாமி : தேவகுருநாதர் அம்பாள் :மதுரபாஷணி

கீழ்வேளூர் ரயில் நிலயத்திற்குத் தென்மேற்கில் கௌதமர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, ஆக 2

## திருப்பள்ளியின்முக்கூடல்

சுவாமி : முக்கோணநாதர்
அம்பாள் : மைமேவுங்கண்ணி

இத்தலம் விற்குடி ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கோயிலுக்கு எதிரில் திருக்குளம் இருக்கிறது. திருவாரூரிலிருந்து பேருந்து மூலம் செல்லலாம்.

பதிகங்கள் ; நாவுக்கரசர் 1. ஆக 1

## திருவாரூர்

சுவாமி : வன்மீகநாதர் அம்பாள் : அல்லியங்கோதை

ரயில்வே நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பிருதிவித்தலம். திருமூலட்டானம், பூங்கோயில் என வேறு பெயர்களும் உண்டு. வீதிவிடங்கத்தியாகர். அசபா நடனம். கமலாலயதீர்த்தம் கோயிலுக்கு மேற்கில் உள்ளது தேவாசிரியமண்டபம் நற்காலம் ஆயிரக்கால் மண்டபம் என்று சொல்லப்படுகிறது. சுந்தரர் பரவையை மணந்து இருந்தருளிய தலம். திருவாரூர்தேரழகு என்ற சிறப்புடைய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 5, நாவுக்கரசர் 21, சுந்தரர் 8 ஆக 34

## திரு ஆரூர் அரநெறி

சுவாமி : அகிலேசுவரர் அம்பாள் ; அகிலேசுவரி

திருமூலட்டானம். கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் மேற்குமுகமாயுள்ளது. நமிநந்தியடிகள் தண்ணீர் கொண்டு விளக்கெரித்த தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 2, ஆக 2

## திரு ஆரூர்ப்பரவையுண்மண்டளி

சுவாமி : மண்டலேசுவரர்

அம்பாள் : பஞ்சின் மெல்லடிநாயகி

தென்மேற்கில் இவ்வாலயம் திருவாரூர் பெரிய தேர் நிலைக்குச் சமீபத்தில் உள்ளது. இதைத் துலா நாயனர் கோயில் என்று அழைக்கிறார்கள். வருணன் அனுப்பிய கடலையுண்டமையால் இத்தலத்துக்கு இப்பெயர் அமைந்தது. இறைவர் உருவம் கண்ணாடி

போல் பளப்பளப்பாகக் காணப்படுகிறது. சுந்தரர் குளத்துள் முழுகிஎழுந்து இறைவரருளால்கண்பெற்ற தலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவிளமர்

சுவாமி : பதஞ்சலிமனோகரர்
அம்பாள் : யாழினுமென்மொழியாள்

திருவாரூருக்குத் தென்மேற்கில் 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ஓடம்போக்கியாற்றின் தென் கரையில் இருக்கிறது. கோயில் சிறியது. பதஞ்சலி முனிவர் பூசித்த தலம்.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கரவீரம்

சுவாமி ; கரவீரநாதர்
அம்பாள் : பிரத்தியக்ஷமின்னும்பிகை

கரையபுரம், திருவாரூர் வடமேற்கே 10 கிலோ மீட்டர் தூரத்தில் இநக்கிறது. கௌதமர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பெருவேளூர்

சுவாமி : பிரியாதநாதர் அம்பாள் : ஏலவார்குழலி

திருவாரூர்க்கு மேற்கே காட்டூர் ஐயன்பேட்டை என்று வழங்கப்படுகின்றது. பேருந்து வசதி உண்டு. கௌதமர் வழிபட்ட தலம்,

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசா 1, ஆக 2

## திருத்தலையாலங்காடு

சுவாமி : ஆடவல்லநாதர் அம்பாள் : திருமடந்தை

கொரடாச்சேரி ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 12 கிலோமீட்டர் தூரத்தில் குடவாயில் உள்ளது. அதற்குக் கிழக்கே 8 கிலோமீட்டரில் இத்தலம் இருக்கிறது. கபிலமுனிவர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருக்குடவாயில்

சுவாமி : கோணேசுவரர் அம்பாள் : பெரியநாயகி

கும்பகோணத்திற்கும் குடவாசலுக்கும் பேருந்து வசதி உண்டு. ஊருக்கு நடுநாயகமாகக் கோயில் அமைந்து விளங்குகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, ஆக 2

## திருச்சேறை

சுவாமி : செந்நெறியப்பர் அம்பாள் : ஞானவல்லி

கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் 14 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. உடையார்கோயில் என்று வழங்கப்படுகிறது. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

## திருநாலூர்மயானம்

சுவாமி : பலாசவனநாதர் அம்பாள் : பெரியநாயகி

குடவாசலுக்கு வடகிழக்கு 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதியும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்

சுவாமி ; சொர்ணபுரிநாதர் அம்பாள் : சிவாம்பிகை

இந்தத் தலத்தை கும்பகோணத்திலிருந்து திருவாரூர் போகும் பேருந்தில் சென்றால் அடையலாம். 16 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அருகில் குடமுருட்டி ஆறு ஓடுகின்றது. குடவாசலிலிருந்து மேற்கே 5 கிலோமீட்டர் தூரம் சென்றாலும் இத்தலத்தை அடையலாம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருவிரும்பூளை

சுவாமி : காசியாரண்ணியர் அம்பாள் : உலகேசுவரி

ஆலங்குடி. நீடாமங்கலம் ரயில் நிலயத்திற்கு வடமேற்கே 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. தட்சிணாமூர்த்தி சந்நிதி விசேடம் கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு,

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவரதைப்பெரும்பாழி

சுவாமி : பாதாளநாதர் அம்பாள் : அலங்காரநாயகி

அரித்துவாரமங்கலம், சாலியமங்கலம் ரயில் நிலயத்திற்கு வடகிழக்கில் 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது இடையில் அவளிவநல்லூர் இருக்கிறது. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவவளிவணல்லூர்

சுவாமி : சாக்ஷிநாயகர் அம்பாள் : சௌந்தரநாயகி

சாலியமங்கலம் ரயில் நிலயத்துக்கு வடகிழக்கில் 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருப்பரிதிநியமம்

சுவாமி : பருதியப்பர் அம்பாள் : மங்களநாயகி

சாலியமங்கலம் ரயில் நிலயத்துக்குத் தென்மேற்கு 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சூரியன் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவெண்ணியூர்

சுவாமி : வெண்ணிநாதர் அம்பாள் : அழகியநாயகி

கோயில்வெண்ணி ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது, சுயம்புமூர்த்தி.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

## திருப்பூவனூர்

சுவாமி : புஷ்பவனநாதர் அம்பாள் : கற்பகவல்லி

நீடாமங்கலம் ரயில் நிலயத்துக்குத் தென்மேற்கில் 3 கிலோமீட்டர். பாமணி ஆற்றின் மேல்கரையில் கோயில் இருக்கிறது. சுகமுநி முதலியோர் மலர் வனம் வைத்து வழிபட்ட தலம்.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருப்பாதாளீச்சுரம்

சுவாமி : சர்ப்பபுரிநாதர் அம்பாள் : அமுதநாயகி

பாமணி என வழங்கப்படுகிறது. மன்னார்குடி ரயில்நிலயத்துக்கு வடக்கே 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இறைவன் இருதிருமுகங்களுடன் காட்சி தந்தருளுகிறார்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்களர்

சுவாமி : களர்முளைநாதர் அம்பாள் : அழகேசுவரி

திருத்துறைப்பூண்டி மன்னார்குடி பேருந்து வழியில் தீவட்டிக்கரை இறங்கித் தெற்கே 4 கிலோ மீட்டர் தூரத்தில் செல்ல வேண்டும். முருகர்சந்நிதி விசேடம்

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருச்சிற்றேமம்

சுவாமி : பொன்வைத்தநாயகர்
அம்பாள் : அகிலாண்டேசுவரி

சிற்றூமூர். திருத்துறைப்பூண்டி அல்லது ஆலத்தம்பாடி ரயில் நிலயத்தில் இறங்கிக் கிழக்கே 5 கிலோ மீட்டர் தூரம் சென்று அரிச்சந்திர நதியைக் கடந்து 2 கிலோ மீட்டர் தூரம் செல்ல வேண்டும். சுவாமி சந்நிதி தென்பக்கத்தில் தேன் கூடு உள்ளது. சித்தர்கள் தேனீக்கள் போல வந்து வழிபட்டதாக வரலாறு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவுசாத்தானம்

சுவாமி : மந்திரபுரிநாதர் அம்பாள் : பெரியநாயகி

கோயிலூர். முத்துப்பேட்டை ரயில் நிலயத்துக்கு வடக்கு 3கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இலிங்கம் வெண்மைநிறச் சுயம்பு

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருஇடும்பாவனம்

சுவாமி : சற்குணநாதர் அம்பாள் : மங்களநாயகி

திருத்துறைப்பூண்டி புகைவண்டி நிலயத்திற்கு தென்மேற்கு 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

பேருந்து வசதி உண்டு. இடும்பன் வழிபட்ட தலம். நெடும்பலம், பாண்டி, தில்லைவிளாகம் ஆகிய தலங்களுக்கு இந்த ரயில் நிலயத்திலிருந்து போகலாம்
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருக்கூடிக்குளம்

சுவாமி : கற்பகநாதர் அம்பாள் : சவுந்தரநாயகி

கற்பகனூர் கோயில். திருத்துறைப்பூண்டியிலிருந்து 15 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது இடும்பாவனத்துக்கு அருகில் உள்ளது
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருத்தண்டலைநீணெறி

சுவாமி : நீணெறிநாதர் அம்பாள் : ஞானம்பிகை

தண்டலைச்சேரி. மணலி ரயில் நிலயத்துக்குச் சமீபம். அரிவாட்டாயநாயனர் முத்தியடைந்த தலம். நாயனர் ஊராகிய கணமங்கலம் கிழக்கே 1 கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது.
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருக்கோட்டூர்

சுவாமி : கொழுந்துநாதர் அம்பாள் மதுரவசனி

மன்னார்குடி ரயில் நிலயத்திலிருந்து தென்கிழக்கே 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. தெற்கே 6 கிலோ மீட்டர் தூரத்தில் திருக்களர் இருக்கிறது.
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருவெண்டுறை

சுவாமி : வெண்டுறைநாதர்
அம்பாள் : வேனெடுங்கண்ணி

மன்னார்குடி ரயில்நிலயத்திற்குக் கிழக்கே 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பிருங்கி முனிவர் அர்த்த

நாரீசுரரைத் துளைத்து இறைவரை மட்டும் வலம் வந்ததாக வரலாறு.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கொள்ளம்பூதூர்

சுவாமி ; வில்வவனநாதர் அம்பாள் : சவுந்தரநாயகி

நீடாமங்கலம் ரயில் நிலயத்திலிருந்து வடகிழக்காக 9 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள, செல்லூர் வழியிலுள்ளது. திருஞானசம்பந்தர் முள்ளியாற்று வெள்ளத்தை இறைவனைப் பாடிக் கடந்தார். ஓடம் தானகவே அக்கரை சென்றதாக வரலாறு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பேரெயில்

சுவாமி ; செகதீசுவரர்

அம்பாள் : பெண்ணமிர்தநாயகி

குழிக்கரை ரயில் நிலயத்துக்குத் தெற்கு 4 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது கோயில் சிறியது நடராசர் உருவம் மிக அழகாக இருக்கிறது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, ஆக 1

## திருக்கொள்ளிக்காடு

சுவாமி : அக்கினிசுவரர்

அம்பாள் . பஞ்சின்மெல்லடியாள்

திருநெல்லிக்காவல் ரயில் நிலயத்திலிருந்து தென்மேற்கே 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருநள்ளாற்றில் இருப்பதுபோலச் சனிபகவான் பிரபலம். மேற்குப்பார்த்த சந்நிதி.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருத்தெங்கூர்

சுவாமி : வெள்ளிமலைநாதர் அம்பாள் : பெரியநாயகி

திருநெல்லிக்காவல் ரயில் நிலயத்திலிருந்து தென் மேற்கில் 2 கிலோமீட்டர் தூரத்தில உள்ளது. பிரகாரத்தில் 9 இலிங்கங்கள் இருக்கின்றன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருநெல்லிக்கா

சுவாமி ; நெல்லிவனநாதர் அம்பாள் : மங்களநாயகி

ரயில் நிலயத்துக்கருகில் கோயில் உள்ளது. சூரியன் வழிபட்ட இடம் ஐப்பசி மாதம் கிருஷ்ணபட்சசதுர்த்தசிமுதல் 7 நாளும் மாசி மாதம் 18-ந்தேதி முதல் 7 நாளும் அஸ்தமன சமயத்தில் சூரியகிரணம் சுவாமிமேல் விழுகின்றன. நெல்லி விருட்சம் காய்கள் சுவாமிக்குமட்டும் பயன்படுகிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருநாட்டியத்தான்குடி

சுவாமி ; இரத்தினகிரிநாதர் அம்பாள் : மலைமங்கை

மாவூர்ரோட் ரயில் நிலயத்திலிருந்து 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கோட்புலிநாயனர் வாழ்ந்த தலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

### திருக்காறுயில்

சுவாமி : கண்ணாயிரநாதர் அம்பாள் : கைலாசநாயகி

திருவாரூருக்குத் தெற்கே 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. நல்லவழி. சப்தவிடங்கத் தலங்களிலொன்று. ஆதிவிடங்கர். குக்குடநடனம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## கன்றுப்பூர்

சுவாமி : நடுதறியப்பர் அம்பாள் : பெரியநாயகி

இத்தலத்தை மாவூர்சாலை ரயில் நிலயத்திலிறங்கி 8 கிலோமீட்டர் தூரம் கிழக்கே சென்றால் அடையலாம் ஊர் சிறியது. கோயில் நாட்டியத்தான்குடி கோயிலைப் போன்றுள்ளது. இறைவர் கன்றுக்குட்டி கட்டும் முளையிலிருந்து தோன்றியவர். சைவ மங்கை வைணவனொருவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவ்வீட்டார் காணாதவாறு கன்று கட்டிய முளையையே இறைவராக எண்ணி வழிபட்டாள். இதைக்கண்ட கணவன் சினங்கொண்டு கோடரியால் அந்த முளையை வெட்டினான். இறைவரும் அம்முளையிடை வெளிப்பட்டார். முளையின் நடுவில் இறைவர் வெளிப்பட்டதால் 'நடுதறி நாதர்' என்னும் பெயரினைப்பெற்றார். கோடரிபட்ட குறி இன்றும் சுவாமிமேல் காணப்படுகிறது.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1 ஆக 1

## திருவலிவலம்

சுவாமி : மனத்துணைநாதர்

அம்பாள் : மாழையங்கண்ணி

திருவாரூருக்குத் தென்கிழக்கே 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சுவாமிசந்நிதி கட்டுமலைமேல் இருக்கின்றது. கோயிலைச்சுற்றிக் கிழக்குப்பக்கம் தவிர எல்லாப் பக்கங்களிலும் மாலைபோல ஓடை ஒன்று இருக்கின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 4

## திருக்கைச்சினம்

சுவாமி: கைச்சினநாதர் அம்பாள்: வெள்வளைநாயகி

திருநெல்லிக்காவல் ரயில் நிலயத்துக்குக் கிழக்கில் 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சிங்கத்தின் மேல் இந்திரன் விரல்பட்ட குறி காணப்படுகிறது. பேருந்து வசதியும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கோளிலி

சுவாமி : கோளிலிநாதர்
அம்பாள் : வண்டமர்பூங்குழலி

திருக்குவளை, கீழ்வேளூர் ரயில் நிலயத்துக்குத் தெற்கே 10 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சப்த விடங்கத் தலங்களிலொன்று. அவனி விடங்கத் தியாகர். பிருங்கநடனம். பிரமன் வழிபட்ட தலம். சுந்தரர் குண்டையூரில் கிடைத்த நெல்லை இவ்வூர் இறைவனைப் பாடித் திருவாரூருக்குப் பூதகணங்கள் உதவியால் எடுத்துச்சென்றூர். பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, சுந்தரர் 1, ஆக 4

## திருவாய்மூர்

சுவாமி : வாய்மூர்நாதர் அம்பாள் : பாலினுநன்மொழி

திருவாரூருக்குத் தென்கிழக்கில் 25 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. சப்த விடங்கத் தலங்களிலொன்று. நீலவிடங்கர், கமல நடனம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

## திருமறைக்காடு

சுவாமி : வேதாரணியர்
அம்பாள் : யாழைப்பழித்தமொழியாள்

வேதாரணியம் ரயில் நிலயத்திலிருந்து 1 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது, விடங்கத் தலங்களுள் இதுவும் ஒன்று. புவனிவிடங்கர், ஹம்ஸபாத நடனம். வேதங்களால் மூடப்பட்டிருந்த திருக்கதவைத் திரு நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் திறக்கவும் அடைக் கவும் பாடிய தலம். சந்நிதிக்கெதிரில் இருக்கும் கட லுக்கு வேததீர்த்தம் என்று பெயர். அதிகமாக அலை கள் இருக்காது. கடலாடுவது மிக விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 4, நாவுக்கரசர் 5, சுந்தரர் 1 ஆக 10

## திருஅகத்தியான்பள்ளி

சுவாமி : அகத்தீசுவரர்
அம்பாள் : பாகம்பிரியாள்நாயகி

ரயில் நிலயத்திற்கு அருகில் உள்ளது. வேதா ரணியத்துக்குத் தெற்கில் 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. அகத்தியர் திருவுருவம் கோயிலில் இருக் கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1.

## திருக்கோடிக்குழகர்கோயில்

சுவாமி ; அமிர்தகடநாதர்
அம்பாள் : மையார்தடங்கண்ணி

குழகர்கோயில். வேதாரணியத்துக்குத் தெற்கே 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. ரயில் நிலயம்

2 கிலோமீட்டர். அகத்தியான்பள்ளி 2 கிலோமீட்டர். கோடிக்கரை கடற்றுறை, வேதாரணியம் செல்வோர் இங்குச் சென்று கடலாடித் திரும்புவது இன்றும் வழக்கமாக உள்ளது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1



## ஈழநாட்டுத் தலங்கள்

### திருக்கேதிச்சுரம்

சுவாமி : கேதீசுவரர் அம்பாள் : கௌரியம்பிகை

இத்தலம் இலங்கைத் தீவில் உள்ளது. தலைமன்னார் ரயில் நிலயத்துக்குக் கிழக்கில் 8 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள பாலாவி என்ற ஆற்றின் கரையில் உள்ள மாதோட்டத்தில் கோயில் இருக்கின்றது. பிருகு முனிவரும், மாலியவான் என்னும் அசுரனும் பூசித்துப் பேறுபெற்ற தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

### திருக்கோணமலை

சுவாமி : கோணேசுவரர் அம்பாள் : மாதுமையாள்

ரயில் நிலயத்துக்கு அண்மையிலும் இலங்கையின் கிழக்குக் கடற்கரையிலும் உள்ள தலம். இந்திரன் வழிபட்ட தலம் ஈழநாட்டரசர் சிங்கை - ஜகராஜசேகர் இயற்றிய தட்சிண கைலாசபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

# பாண்டிய நாட்டுத் தலங்கள்



## திருவாலவாய் - மதுரை

சுவாமி ; சுந்தரேசுவரர் அம்பாள் ; மீனாட்சியம்மை

ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. வெள்ளியபபலம். மூர்த்திநாயனுர் முத்தி பெற்ற தலம். திருஞானசம்பந்தர் திருநீற்றுப் பெருமையை அறிவுறுத்திய தலம். மீனாட்சியம்மை சந்நிதிவிசேடம். பொற்றாமரைத் தீர்த்தம் காண வேண்டியது

பதிகங்கள் : சம்பந்தர் 9, நாவுக்கரசர் 2, ஆக 11

## திருவாப்பனூர்

சுவாமி : ஆப்பனூர்நாதர்
அம்பாள் ; அம்பிகை.

மதுரை மீனாட்சியம்மை கோயிலுக்கு வடக்கே 2 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது, வைகையாறு அருகில் ஓடுகிறது

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்பரங்குன்றம்

சுவாமி ; பரங்கிரிநாதா அம்பாள் ; ஆவுடையம்மை

ரயில்நிலயத்துக்கு அருகில் உள்ளது ஆறுபடை வீடுகளில் முதன்மையானது. தெய்வயானையை மணந்த தலம் மதுரையிலிருந்தும் பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1 ஆக. 2

## திருவேடகம்

சுவாமி : ஏடகநாதர் அம்பாள் : உமாதேவி

மதுரையிலிருந்து 18 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. நல்லவழி, திருஞானசம்பந்தர் புனல் வாதத்தில் வைகையிலிட்ட ஏடு எதிர்சென்று தங்கிய இடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கொடுங்குன்றம்

சுவாமி : கொடுங்குன்றிசர்

அம்பாள் : குயிலமுதநாயகி

பிரான்மலே இத்தலத்திற்குக் காரைக்குடி ரயில் நிலயத்திலிருந்து திருப்புத்தூர் வழியாகப் பேருந்தில் செல்லவேண்டும். நாகராசன் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருப்புத்தூர்

சுவாமி : புத்தூர்நாதர் அம்பாள் ; சிவகாமி

இத்தலம் காரைக்குடி ரயில் நிலயத்திலிருந்து 18 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது பேருந்து வசதி உண்டு. இலக்குமி வழிபட்ட தலம். வயிரவர் சந்நிதி இத்தலத்தில் விசேடமானது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருப்புனவாயில்

சுவாமி : புனவாயிநாதர் அம்பாள் : கருணைநாயகி

அறந்தாங்கி ரயில் நிலயத்திலிருந்து 45 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. நல்லவழி. நந்தி, இலிங்கம், ஆவுடையார் மிகப் பெரியவடிவினவை, சுவாமிக்கு 3 முழம் ஆவுடையா

ருக்கு 30 முழம் ஆடைவேண்டும். பாண்டி 14 தலமும் திருப்புனவாயிலில் இருப்பதாக வரலாறு. 14 இலிங்கங்கள் கோயிலுள் உள்ளன,

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருவிராமேச்சுரம்

சுவாமி ; இராமநாதர் அம்பாள் ; பருவதவர்த்தனி

ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. இராமர் வழிபட்ட தலம், கோயில் மிகப்பெரியது. கடல் கிழக்குக் கோபுரத்துக்கு நேராக இருக்கிறது. பல தீர்த்தங்கள் உள்ளன. தெற்கே தனுஷ்கோடி 18 கிலோ மிட்டர் தூரத்தில் உள்ளது, அங்கிருந்து நீராடுதுறை 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. தற்காலம் தனுஷ்கோடி ரயில் நிலயம் இல்லை நீராடு கட்டமும் நல்லமுறையில் காணப்படவில்லை. கோயில் பிரகாரம் காணவேண்டியது-

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, ஆக 3

## திருவாடானே

சுவாமி ; இரத்தினநாதர் அம்பாள் ; அம்பாயிரவல்லி

தேவக்கோட்டையிலிருந்து 38 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. பேருந்து வசதி உண்டு கோயில் பெரியது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கானப்பேர்

சுவாமி : காளையப்பர் அம்பாள் : மகமாயி

காளையார்கோயில். நாட்டரசன்கோட்டை ரயில் நிலயத்திலிருந்து 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு கோயில் பெரியது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருப்பூவணம்

சுவாமி : பூவணநாதர் அம்பாள் ; மின்னும்பிகை

ரயில் நிலயத்திற்கு அருகில் இருக்கிறது, பொன்னனையாள் வழிபட்ட தலம். மூவேந்தரும் வழிபட்ட தலம். புட்பவனகாசி என்ற பெயரும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 4

## திருச்சுழியல்

சுவாமி: திருமேனிநாதர் அம்பாள்: துணைமாலைநாயகி

விருதுநகர் ரயில்நிலயத்திற்குக் கிழக்கில் 30கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது பார்வதி வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்குற்றாலம்

சுவாமி: குறும்பலாநாதர் அம்பாள்: குழல்வாய்மொழி

தென்காசி ரயில் நிலயத்திற்கு மேற்கே 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. பலாவிருட்சம. சித்திரசபை உ..ள தலம். மலையருவி விசேடம். திருவாவடுதுறை ஆதீனத்தில் தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, ஆக 2

## திருநெல்வேலி

சுவாமி: வேணுவனநாதர் அம்பாள்: காந்திமதிநாயகி

ரயில் நிலயத்திலிருந்து 2 கிலே மீட்டர் தூரத்தில் உள்ளது. தாமிரசபை இருக்கிறது நெல்லை வேலி கட்டிக்காத்தமையால் தலத்திற்கு நெல்வேலியென்று பெயர் உண்டாயிற்று.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1,

## மலை நாடு



### திருவஞ்சைக்களம்

சுவாமி : அஞ்சைக்களத்தப்பர்
அம்பாள் : உமையம்மை

மலையாள நாட்டிலுள்ள இருஞாலக்கடை ரயில் நிலயத்திலிருந்து தென்மேற்கே 8 கிலோமீட்டர் தூரம் காரில் சென்று, அங்கிருந்து 9 கிலோமீட்டர் தூரம் கடந்து கருவப்படனை என்னும் ஊரை அடைந்து, பின் 6 கிலோமீட்டர் தூரம் படகில் சென்றால் இத் தலத்தை அடையலாம். எர்ணாகுளமிருந்தும் 'ஸ்டீம் லாஞ்சில்' 30 கிலோமீட்டர் தூரம் சென்றாலும் இத் தலத்தை அடையலாம். திருச்சூரிலிருந்து பேருந்தில் புல்லூற்றை அடைந்து அங்கிருந்து நாட்டுப்படகில் ஏறி ஆற்றைக் கடந்தால் இத்தலத்தை அடையலாம். இது நல்லதும் சுலபமானதுமான வழி. சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் கயிலை சென்று அடைந்த தலம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

---

## கொங்கு நாட்டுத் தலங்கள்



### அவிநாசி

சுவாமி : அவிநாசியப்பர்
அம்பாள் : பெருங்கருணைநாயகி

திருப்பூர் ரயில் நிலயத்திற்கு வடக்கே 12 கிலோ மீட்டர் தூரத்தில் இத்தலம் இருக்கிறது. போகும் வழியில் திருமுருகன்பூண்டி இருக்கிறது. நல்லவழி.

அவிநாசி என்றால் விநாசமில்லாதது என்று பொருள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலை வாயினின்றும் அந்தணப் பிள்ளையை மீட்டுக் கொடுத்தருளிய ஏரியும் இருக்கின்றது. ஏரிக்கரையின்கீழ் சுந்தரமூர்த்தி சுவாமி களின் கோயில் இருக்கின்றது. அந்த முதலை வாயி லின்று பிள்ளையை அழைத்தருளிய பாவனை காட்டப் பட்டிருக்கின்றது. நந்தி பெரிய உருவம். தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருமுருகன்பூண்டி

சுவாமி : முருகாவுடையார்

அம்பாள் : ஆவுடைநாயகி

திருப்பூர் ரயில் நிலயத்துக்கு வடக்கே 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. மாதவிவனம் என்ற வேறு பெயரும் உண்டு. மாதவி – குருக்கத்திமரம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருநணா

சுவாமி ; சங்கமுகநாதர் அம்பாள் ; வேதமங்கை

பவானி, பவானியும் காவிரியும் கூடுமிடத்தில் இருக்கிறது. அமுதநதி கூடுவதால் பவானி முக்கூட லென்றும் கூறுவார்கள். ஈரோட்டிற்கு வடக்கே 12 கி. மீட்டர் தூரத்திலுள்ளது. பேருந்து வசதிஉண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கொடிமாடச்செங்குன்றூர்

சுவாமி : அர்த்தநாரீசுவரர்

அம்பாள் : அர்த்தநாரீசுவரி

சேலம் மாவட்டம் சங்கரிதுர்க்கம் ரயில் நிலயத்துக் குத் தென்கிழக்கில் 9 கிலோமீட்டர் தூரத்தில் உள்

ளது. கோயில் மலைமேல் இருக்கின்றது வழியில் மண்டபங்களும் சுனைகளும் இருக்கின்றன. மலைமே லிருந்து பார்த்தால் காவிரி ஆறுதெரியும் மலை சிவந்த நிறமாக இருப்பதால் திருச்செங்கோடு என்ற பெயரும் உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவெஞ்சமாக்கூடல்

சுவாமி , விகிர்தேசுவரர் அம்பாள் : விகிர்தேசுவரி

கருவூரிலிருந்து தெற்கே 22 கிலோமீட்டர் தூரம் சென்று குழகனாற்றைக் கடந்தால் தலத்தை அடைய லாம், கோயில் சற்றுப் பள்ளத்தில் இருக்கிறது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1,

## திருப்பாண்டிக்கொடுமுடி

சுவாமி : கொடுமுடிநாதர்

அம்பாள் : பண்மொழியாள்

கொடுமுடி ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. காவிரிக்கரையில் உள்ளது, பிரமதேவர் சந்நிதி இருக் கிறது.

பதிகங்ள் : சம்பந்தர் 1! நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருக்கருவூரானிலை

சுவாமி : பசுபதிநாதர் அம்பாள் : கிருபாநாயகி

ரயில் நிலயத்திற்கு அருகில் உள்ளது, காமதேனு பூசைசெய்து படைப்புத் தொழில் செய்ய வரம்பெற்ற தலம். அதனால் ஊருக்குக் கருவூர் என்ற பெயர் வந்தது. இறைவர் பசுபதி என்று வழங்கப்படு கிறார். கோயிலுக்கு ஆநிலை என்று பெயர். இலிங்க

மூர்த்தி வடபுறமாகச் சாய்ந்து காட்சி கொடுக்கிறார். கோயிலும் கோபுரமும் பெரியன. தேவியார் சந்நிதி இரண்டு உள்ளன. எறிபத்த நாயனருடைய தலம். சிவகாமி ஆண்டார் என்ற பெரியவர் வாழ்ந்தபதி. திருவிசைப்பா பாடிய கருவூர்த்தேவர் அவதரித்து முத்திபெற்ற தலம்,

பதிகங்கள் : சம்பந்தர் 1. ஆக 1

---

## நடு நாட்டுத் தலங்கள்



### திருநெல்வாயில்அரத்துறை

சுவாமி : அரத்துறைநாதர் அம்பாள் ; ஆனந்தநாயகி

பெண்ணுகடம் ரயில் நிலயத்துக்குத் தென்மேற்கில் 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. நிவா நதியின் வடகரையில் இருக்கிறது. சப்தரிஷிகள் பூசித்த ஏழு துறைகளுள் ஒன்று. திருஞான சம்பந்தருக்கு முத்துச்சிவிகை முத்துக்குடை முத்துச் சின்னங்கள் கொடுத்தருளிய தலம். அட்டலட்சுமி முதலிய சிற்பத் திறங்கள் காணவேண்டியனவாகும்,

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

### திருத்தூங்கானைமாடம்

சுவாமி : சுடர்க்கொழுந்துநாதர்
அம்பாள் : கடந்தைநாயகி

பெண்ணுகடம் ரயில் நிலயத்துக்கு அருகே இருக்கிறது. கலிக்கம்ப நாயனர் தோன்றிய தலம், தேவ

கன்னியர் காமதேனு வெள்ளையானை வழிபட்ட தலம். மெய்கண்டதேவரின் தந்தை அச்சுத களப்பாளர் இருந்த ஊர்.

திபகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருக்கூடலையாற்றூர்

சுவாமி : நெறிகாட்டுநாயகர் அம்பாள் : புரிகுழலாள்

சிதம்பரம் ரயில் நிலயத்திலிருந்து 21 கிலோமீட்டர் தூரம் சென்றால் நிவாநதி கூடுமிடத்தில் இத்தலம் உளது. விருத்தாசலமிருந்தும் இத்தலத்திற்குச்செல்லலாம், பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவெருக்கத்தம்புலியூர்

சுவாமி : நீலகண்டேசுவரர்
அம்பாள் ; நீலமலர்க்கண்ணி

விருத்தாசலத்திற்குத் தெற்கில் 10 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. நல்லவழி. திருநீலகண்டப் பெரும்பாணநாயனார் தோன்றிய தலம். கோயிலுக்குள் வெள்ளெருக்கஞ்செடி இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருத்தினைநகர்

சுவாமி : திருந்திசுவரர்
அம்பாள் : இளங்கொம்பன்னாள்

புதுச்சத்திரம் ரயில் நிலயத்துக்கு வடமேற்கே 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. தினையமுது படைப்பது விசேடம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருச்சோபுரம்

சுவாமி : சோபுரநாதர் அம்பாள் : சோபுரநாயகி

ஆலப்பாக்கம் ரயில் நிலயத்தில் இருந்து வடகிழக்கே 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. தோணியேறி உப்பங்கழியைக் கடந்து மணல் வழியே போக வேண்டும். இத்தலம் மணலினால் மூடப்பட்டு இருந்தது 125 ஆண்டுகட்கு முன் இரண்டு தம்பிரான்களால் கண்டுபிடிக்கப்பட்டதால் ''தம்பிரான் கண்ட தலம்'' என்ற பெயரும் உண்டு. சுற்றிலும் உயர்ந்த மணற்குன்றுகளை இன்றும் காணலாம். அருகில் கடல் இருக்கிறது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவதிகைவீரட்டானம்

சுவாமி : அதிகைவீரட்டானநாதர்

அம்பாள் : அதிகைநாயகி

பண்ணுருட்டி ரயில் நிலயத்துக்குத் தென்கிழக்கில் 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கெடில நதியின் வடகரையில் இருக்கிறது அட்டவீரட்டத் தலங்களிலொன்று. திலகவதியார் வழிபட்டுப் பேறுபெற்ற தலம். திருநாவுக்கரசரின் சூலைநோயை நீக்கித்தடுத்து ஆட்கொண்ட தலம் கர்ப்பக்கிரகம் தேர்போல் பதுமைகளால் அலங்கரிக்கப்பெற்று நிழல் பூமியில் சாயாதபடி கட்டப்பட்டுள்ளது. இலிங்கம் பட்டை பட்டையாகத் திகழ்கின்றது

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 16, சுந்தரர் 1 ஆக 18

## திருநாவலூர்

சுவாமி : நாவலேசுவரர் அம்பாள் ; சுந்தராம்பிகை

திருவெண்ணெய்நல்லூருக்குத் தென்கிழக்கில் 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சுந்தரமூர்த்தி நாயனர் அவதரித்த தலம். பண்ணுருட்டியிலிருந்து 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது பேருந்து வசதி உண்டு. சிறிய கிராமம்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருமுதுகுன்றம்

சுவாமி ; பழமலைநாதர் அம்பாள் : பெரியநாயகி

விருத்தாசலம் என வழங்கப்படுகிறது. கோயில் ரயில் நிலயத்திலிருந்து 3 கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. மணிமுத்தாறு கோயில் அருகில் ஓடுகிறது சுந்தரர் பொன்வேண்டிப் பெற்ற தலம். விருத்தகாசி என்றும் வழங்கப்படுகிறது ஆழத்துப்பிள்ளையார் சந்நிதி விசேஷம். காசி செல்ல முடியாதோர் இதனைக் காசியாகவே எண்ணி வழிபாடு செய்கிறார்கள்.

பதிகங்கள் : சம்பந்தர் 7, நாவுக்கரசர் 1, சுந்தரர் 3 ஆக 11

## திருநெல்வெண்ணெய்

சுவாமி : வெண்ணெயப்பர்
அம்பாள் ; நீலமலர்க்கண்ணி

உளுந்தூர்பேட்டை ரயில் நிலயத்திலிருந்து 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கோயில் இது பொழுது நல்ல நிலையில் இல்லை.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கோவலூர்வீரட்டம்

சுவாமி : வீரட்டநாதர் அம்பாள் : சிவாநந்தவல்லி

ரயில் நிலயத்துக்கு அருகில் பெண்ணையாற்றின் தென்கரையில் இருக்கிறது அட்டவீரட்டங்களில் ஒன்று

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருவறையணிநல்லூர்

சுவாமி : அறையணிநாதர் அம்பாள் : அருளையகி

திருக்கோவலூர் ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. பெண்ணையாற்றின் வடகரை. கோயில் சிறு குன்றின்மேல் இருக்கிறது சந்நிதி மேற்குப் பார்த்தது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருஇடையாறு

சுவாமி ; இடையாற்றுநாதர்

அம்பாள் : சிற்றிடைநாயகி

மாம்பழப்பட்டு ரயில்நிலயத்துக்குத் தென்மேற்கில் 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பெண்ணையாற்றையும், மலட்டாற்றையும் போகும் வழியிலே கடக்கவேண்டும்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவெண்ணெய்நல்லூர்

சுவாமி : தடுத்தாட்கொண்டநாதர்

அம்பாள் : வேற்கண்ணி

ரயில்நிலயத்திலிருந்து 6 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது ஆலயம் திருவருட்டுறை என்று அழைக்கப் படுகிறது. சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட தலம்.

மெய்கண்டதேவர் அவதரித்த திருத்தலம். கோயில் தனியே உள்ளது திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. திருமடமும் தனியே உள்ளது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருத்துறையூர்

சுவாமி ; துறையூர்நாதர்
அம்பாள் : பூங்கோதைநாயகி

ரயில் நிலயத்துக்கு மேற்கில் 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. அருணந்தி சிவாச்சாரியார் முத்தி பெற்ற தலம். மேற்கு பார்த்த சந்நிதி சுந்தரருக்குக் காட்சிகொடுத்த பெருமான் மேலே வீற்றிருக்கிருர்.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவடுகூர்

சுவாமி ; வடுகூர்நாதர் அம்பாள் ; வடுவகிர்க்கண்ணி

ஆண்டார்கோயில் என்று வழங்கப்படுகிறது. சின்னபாபு சமுத்திரம் ரயில் நிலயத்துக்கு மேற்கே 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. வைரவர் வழிபட்ட தலம். கோயில் சிறியது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருமாணிகுழி

சுவாமி : மாணிக்கவரதர் அம்பாள் ; மாணிக்கவல்லி

திருப்பாதிரிப்புலியூர் ரயில் நிலயத்துக்கு மேற்கே 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கேபர் மலே ஓரமாகச்சென்ருல் இத்தலத்தை அடையலாம் வழியில் திருவஹிந்திரபுரம் இருக்கிறது. எப்பொழுதும்

சந்நிதி திரையிடப்பட்டிருக்கிறது. திரையில் ருத்திர உருவம் எழுதப்பட்டுள்ளது. முதலில் அவர்க்கு அருச்சனை. பின்னர்தான் இலிங்கத்தை வழிபடலாம்.
பதிகங்கள் : சம்பந்தர் 1. ஆக 1

## திருப்பாதிரிப்புலியூர்

சுவாமி : தோன்றாத்துணைநாதர்
அம்பாள் : தோகைநாயகி

ரயில் நிலயத்திற்கு அண்மையில் உள்ளது கெடில நதியின் தென்கரையில் உள்ளது. நாவுக்கரசர் கடலிலிருந்து கரையேறிய தலம்.
பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

## திருமுண்டீச்சரம்

சுவாமி : முண்டீசுரர் அம்பாள் : கானார்குழலி

திருவெண்ணெய்நல்லூருக்குக் கிழக்கில் 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சிறு கிராமம் பிரமன் வழிபட்ட தலம். திருவெண்ணெய்நல்லூரிலிருந்தும் இத்தலத்துக்குச் செல்லலாம்.
பதிகங்கள் ; நாவுக்கரசர் 1. ஆக 1

## திருப்புறவார்பனங்காட்டூர்

சுவாமி : பனங்காட்டீசுரர்
அம்பாள் : புறவாம்பாள்

பனையபுரம். முண்டியம்பாக்கம் ரயில் நிலயத்திலிருந்து வடகிழக்கே 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சூரியன் வழிபட்ட தலம். சித்திரை மாதம் முதல்தேதி முதல் 7 ம் தேதிவரை காலையில் சூரிய

கிரணம் முன்னர் சுவாமி மீதும் பின்னர் தேவி மீதும் விழுகின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருஆமாத்தூர்

சுவாமி : அழகுகாதலர் அம்பாள் : அழகம்மை

விழுப்புரம் ரயில் நிலயத்துக்கு வடமேற்கில் 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. பம்பையாற்றின் வடகரையில் உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 2, சுந்தரர் 1, ஆக 5

## திருவண்ணுமலை

சுவாமி ; அருணுசலேசுரர்
அம்பாள் : உண்ணுமுலை

இத்தலக்கோயில் ரயில் நிலயத்திலிருந்து 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. இது பஞ்சபூதத் தலங்களுள் தேயுத்தலம். இது விராட்புருடனின் மணிபூரகத்தானம். நினைக்க முத்தி அளிக்கும் தலம் இறைவன் வல்லாள மகாராஜனுக்குப் புதல்வராகத் தோன்றி அருள் செய்த தலம். கார்த்திகை மாதக் கிருத்திகையில் தீபதரிசனத் திருவிழா உலகப்பிரசித்த மானது. அருணகிரிநாதர் அவதரித்த தலம். கிரிவலம் வருவது விசேடம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 3, ஆக 5.

---

# தொண்டை நாடு

## திருக்கச்சியேகம்பம்

சுவாமி ; ஏகம்பரநாதர் அம்பாள் : காமாட்சியம்மை

காஞ்சீபுரம் ரயில் நிலயமுண்டு பிருதுவித்தலம். உமை இறைவனை வழிபட்டு 32 அறங்களாற்றிய தலம். சுந்தரர் இடதுகண் பார்வை பெற்ற தலம். முத்தித் தலம் ஏழனுள் ஒன்று. காமகோட்டம், குமரகோட்டம் விசேடம். நகரிற் சிறந்தது காஞ்சியெனப் புகழப் பெற்ற தலம். தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது

பதிகங்கள் : சம்பந்தர் 4, நாவுக்கரசர் 7, சுந்தரர் 1 ஆக 12

## திருக்கச்சிமேற்றளி

சுவாமி : மேற்றளிநாயகர்

இத்தலம் காஞ்சீபுரத்தின் மேற்குப் பகுதியாகிய பிள்ளையார் பாளையத்தில் இருக்கிறது. திருமால் தவமிருந்து சிவசொரூபம் பெற்ற தலம். இரண்டு சந்நிதி. ஒன்று ஓதவுநகீசுரர், மற்றொன்று திருமேற் றளி ஈசுரர் சந்நிதி.

பதிகங்கள் : நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருவோணகாந்தன்றளி

சுவாமி ; ஓணகாந்தீசுவரர்

இந்தத் தலம் ஏகாம்பரநாதரது ஆலயத்திற்கு மேற்கே மிக அண்மையில் உள்ளது. சுந்தரர் இறை வரைப் பாடிப் பொன்பெற்ற தலம். இங்கு மூன்று சந்நிதிகள் உள்ளன.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்கச்சியனேகதங்காவதம்

சுவாமி : காவதநாதர்

காஞ்சீபுரத்தின் வடமேற்கில் கழனிவெளி மத்தியில் இருக்கிறது. ஆனையுரித்தான் வயல் கோயிலின் மேல்பால் இருக்கிறது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்கச்சிநெறிக்காரைக்காடு

சுவாமி ; காரைத்திருநாதர்

காஞ்சீபுரத்துக்கு வடகிழக்கில் இருக்கிறது. காரைச்செடி மிகுந்த ஊர்

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருகுரங்கணின்முட்டம்

சுவாமி ; வாலீசுவரர்
அம்பாள் : இறையார்வளையம்மை

காஞ்சீபுரத்துக்குத் தெற்கே 9 கிலோமீட்டரில் பாலாற்றின் கரையில் உள்ளது. குரங்கு, அணில், காகம் மூன்றும் வழிபட்ட தலம். காக்கை மடு கோயிலைச் சுற்றி அகழிபோன்று உள்ளது.
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருமாகறல்

சுவாமி : அடைக்கலங்காத்தவர்
அம்பாள் : புவனநாயகி

காஞ்சீபுரத்துக்குத் தெற்கே 15 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. வழியில் வேகவதி ஆற்றையும் பாலாற்றையும் கடக்கவேண்டும். இந்திரன்

வழிபட்ட தலம். பிள்ளைப்பேறு வேண்டி இத்தலத்தில் அங்கப்பிரதட்சணஞ் செய்கின்றார்கள்.
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவோத்தூர்

சுவாமி: வேதநாயகர் அம்பாள் : இளமுலைநாயகி

காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்கே 30 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. இடையில் பாலாறு ஓடுகின்றது. நல்லவழி. பேருந்து வசதி உண்டு. கோயில் பெரியது. ஆண்பனை பெண்பனையாகிய தலம். வெளிப்பிரகாரத்தில் 4, 5 பனைமரங்கள் உள்ளன. கோயிலுள் பெருமாளுக்குத் தனியாகச் சந்நிதி இருக்கிறது.
பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவன்பார்த்தான்பனங்காட்டூர்

சுவாமி: பனங்காட்டுநாதர் அம்பாள் : அமிர்தவல்லி

காஞ்சீபுரத்துக்குத் தெற்கே 6கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. ஐயன்குளம் இருக்கிறது. அங்கிருந்து ஆர்க்காடுபோகும் வழியில் 6 கிலோமீட்டர் சென்றால் இத்தலத்தை அடையலாம். வழியில் வேகவதி பாலாறு இருக்கின்றன. இத்தலத்தில் 2 சந்நிதிகள் உள்ளன.
பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவல்லம்

சுவாமி: வல்லநாதர் அம்பாள் : வல்லாம்பிகை

இத்தலம் ரயில்வே நிலயத்திலிருந்து 3 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது நிவாநதியின் மேல்கரையில் இருக்கின்றது. நவக்கிரகங்கள் வழிபட்ட தலம்,
பதிகள்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருமாற்பேறு

சுவாமி : மால்வணங்குநாதர்  அம்பாள் : கருணைநாயகி

பள்ளூர் ரயில் நிலயத்துக்குத் தென்மேற்கில் 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. திருமால் வழிபட்டுச் சக்கரம் பெற்ற தலம். இறைவன் தீண்டாத் திருமேனி, குவளைசாத்தி அபிஷேகம் நடைபெறுகின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 4, ஆக 6

## திருவூறல்

சுவாமி : உமாபதி  அம்பாள் : உமையம்மை

தக்கோலம் என்று வழங்குகிறது. தக்கோலம் ரயில் நிலயத்துக்குக் கிழக்கில் 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. நந்திதேவரது வாயிலிருந்து நீர் எப்பொழுதும் விழுந்துகொண்டிருக்கிறது. அதனால் திருவூறல் என்று பெயர் பெற்றுள்ளது கோயிலுக்கு வடக்கே நந்தி தீர்த்தம் இருக்கிறது.

பதிகங்கள், : சம்பந்தர் 1 ஆக 1

## திருவிலம்பையங்கோட்டூர்

சுவாமி : சந்திரசேகரர்
அம்பாள் : கோடேந்துமுலையாள்

சென்னையிலிருந்து 60 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கூவம் ஏரியைக் கடக்கவேண்டும். வழி செம்மையாக இல்லை.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவிற்கோலம்

சுவாமி : திரிபுராந்தகர்  அம்பாள் : திரிபுராந்தகி

கடம்பத்தூர் ரயில் நிலயத்திலிருந்து தெற்கில் 9 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சென்னையிலிருந்தும் பேருந்து மூலம் போகலாம் அற்புதத்தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவாலங்காடு

சுவாமி : ஊர்த்ததாண்டவர்
அம்பாள் : வண்டார்குழலி

ரயில் நிலயத்துக்கு வடகிழக்கில் 4 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. ஐந்து சபைகளில் இரத்தின சபை அமைந்த தலம். ஐந்து தாண்டவம் காரைக்காலம்மையார் தலையால் நடந்துசென்று வழிபட்ட தலம். திருக்குளம் பெரியது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2,
சுந்தரர் 1, ஆக 4

## திருப்பாசூர்

சுவாமி : பாசூர்நாதர்  அம்பாள் : பசுபதிநாயகி

திருவள்ளூர் ரயில் நிலயத்திற்கு வடமேற்கில் 7 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இறைவன் மூங்கிலடியில் தோன்றியதால் இத்தலத்திற்கு இப்பெயர் அமைந்தது

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 2, ஆக 3

## திருவெண்பாக்கம்

சுவாமி : வெண்பாக்கநாதர்
அம்பாள் : கனிவாய்மொழி

சென்னைக்கு மேற்கே 40 கிலோமீட்டர் தூரத்தில் இருந்த தலம். தற்காலம் பூண்டி நீர்த்தேக்கத்தில் முழுகிக்கிடக்கின்றது. திருவுளம்பூதூர் என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருக்கள்ளில்

சுவாமி : சிவானந்தர் அம்பாள் : ஆனந்தவல்லி

சென்னையிலிருந்து நெல்லூர் போகும் வழியில் 22 கிலோமீட்டர் தூரத்தில் கள்ளிப்புத்தூர் இருக்கின்றது. பேருந்து வசதி உண்டு. கள்ளிப்புத்தூரிலிருந்து 3 கிலோமீட்டர் தெற்கே கோயில் இருக்கிறது. பிருகுமுனிவர் வழிபட்ட தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்காளத்தி

சுவாமி : காளத்திநாதர்
அம்பாள் ; ஞானப்பூங்கோதை

ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. சுவர்ணமுகி ஆற்றைக்கடந்து ஊருக்குச் செல்லவேண்டும். வாயுத்தலம். மேற்கு நோக்கிய சந்நிதி. சிலந்தி, பாம்பு. யானை மூன்றும் வழிபட்டு முத்தி பெற்ற தலம் கண்ணப்பநாயனர் இறைவனை வழிபட்டு 6 நாளில் முத்தி அடைந்தார். வடக்கில் துர்க்கைமலை. தெற்கில் கண்ணப்பர்மலை, கிழக்கில் குமாரசாமிமலை இருக்

கின்றது. சுவாமி சந்நிதியில் எரியும் தீபம் எப்பொழுதும் அசைந்துகொண்டே இருக்கின்றது.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1 ஆக 4

## திருவொற்றியூர்

சுவாமி : மாணிக்கத்தியாகர்
அம்பாள் : வடிவுடைநாயகி

ரயில் நிலயம் உள்ளது. சென்னைக்கு வடக்கில் 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கலியநாயனுருடைய தலம். சுந்தரமூர்த்தி நாயனுர் சங்கிலி நாச்சியாரை மணம்புரிந்த தலம். பட்டினத்துப் பிள்ளையார் முத்தியடைந்த தலம். சுவாமி எழுத்தறியும்பெருமாள் என்னும் பெயரினர்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 5, சுந்தரர் 2 ஆக 8

## திருவலிதாயம்

சுவாமி: வலிதாயநாதர் அம்பாள் ; தாயம்மை

சென்னைக்கு மேற்கே 9 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள வில்லிவாக்கம் (கொன்னூர்) ரயில் நிலயத்துக்குத் தென்மேற்கே 3 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. குறட்டூர் ரயில் நிலயத்துக்குத் தெற்கு 3 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. கோயில் சிறியது. கிணற்று நீர் நன்ருக உள்ளது. தல வரலாறு அச்சிடப்பட்டுள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## வடதிருமுல்லைவாயில்

சுவாமி பாசுபதேசுவரர்
அம்பாள் : கொடியிடையாள்

அம்பத்தூர் ரயில் நிலயத்துக்கு வடமேற்கில் 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சுவாமி நீண்டாத் திருமேனியர். சந்தனக்காப்பு சாத்துகிறார்கள். சுவாமி சந்நிதியில் எருக்கந்தூண்கள் இரண்டு உள்ளன. தூணின் மூன்று இடங்களில் பூண் கட்டப்பட்டுள்ளன.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவேற்காடு

சுவாமி : வேற்காட்டுநாதர் அம்பாள் ; வேற்கண்ணி

ஆவடி ரயில் நிலயத்திலிருந்து தெற்கே பூவிருந்தவல்லி போகும் வழியில் 6 கிலோ மீட்டர் சென்று காடுவெட்டி ஆற்றைக்கடந்தால் கோயிலை அடையலாம். வடவேதாரண்யம். விஷம் தீண்டா மகிமையுடையது. மூர்க்க நாயனார் அவதரித்த தலம். திருவாவடுதுறை மகாசந்நிதானம் இயற்றிய தலபுராணம் அச்சிடப்பட்டுள்ளது. அம்பிகை சந்நிதி விசேடம். கருமாரியம்மன் விசேடம். காணவேண்டியது. பேருந்து வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருமயிலாப்பூர்

சுவாமி : கபாலீசுவரர் அம்பாள் ; கற்பகவல்லி

சென்னையில் உள்ளது. திருஞானசம்பந்தர் பூம்பாவையின் எலும்பைப் பெண்ணுருவாக்கிய தலம். கற்பகாம்பிகை சந்நிதி விசேடம்.

பதிகங்கள் ; சம்பந்தர் 1, ஆக 1

## திருவான்மியூர்

சுவாமி : பால்வண்ணநாதர் அம்பாள் : சுந்தரநாயகி

கடற்கரையில் ஓரமாக உள்ள கோயில். மயிலாப்பூருக்குத் தெற்கு 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது பால்நிறமான சுயம்புமூர்த்தி. வான்மீகமுனிவர் வழிபட்ட தலம். பசுவின் குளம்பு வடு இறைவன் திருமேனிமேல் காணப்படுகின்றது. பேருந்து வசதி மிக உண்டு.

பதிகங்கள் ; சம்பந்தர் 2, நாவுக்கரசர் 1, ஆக 3

## திருக்கச்சூர் ஆலக்கோயில்

சுவாமி : விருந்திட்டவரதர்
அம்பாள் ; உமையம்மை

சிங்கப்பெருமாள் கோயில் ரயில் நிலயத்துக்கு வடமேற்கில் 2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. தலவிருட்சம் ஆல். இலிங்கம் மிகவும் சிறியது.

பதிகங்கள் : சுந்தரர் 1, ஆக 1

## திருவிடைச்சுரம்

சுவாமி : இடைச்சுரநாதர் அம்பாள் : இமயாம்பிகை

செங்கல்பட்டு ரயில் நிலயத்துக்குக் கிழக்கே 8 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சநற்குமார முனிவர் வழிபட்ட தலம். மரகதலிங்கம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கழுக்குன்றம்

சுவாமி : வேதகிரீசுவரர் அம்பாள்: பெண்ணினல்லாள்

செங்கற்பட்டு ரயில் நிலயதுக்குத் தென்கிழக்கே 10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. நாள்தோறும்

உச்சிக்காலத்தில் இரண்டுகழுகுகள் வந்து சர்க்கரைப் பொங்கல் உண்டு மலையை வலஞ்செய்து போவதை இன்றும் காணலாம். சங்கு தீர்த்தம். மலையை வலம் வரலாம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1. நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருஅச்சிறுபாக்கம்

சுவாமி ; பாக்கபுரேசுரர் அம்பாள் ; சுந்தரநாயகி

ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ளது. திரிபுர தகனஞ்செய்ய இறைவன் சென்ற பொழுது தேர் அச்சு முறிந்தது. அதனால் இப்பெயர் பெற்றது பானுதீர்த்தம் கோயிலருகில் ஓடுகிறது

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவக்கரை

சுவாமி ; சந்திரசேகரர் அம்பாள் : வடிவாம்பிகை

மயிலம் ரயில் நிலயத்திலிருந்து 18 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. 8 கிலோமீட்டர் வயல் வழியாகச் செல்லவேண்டும். சுவாமி மூன்று முகங்களுடன் விளங்குகிறார்.

பதிகங்கள் : சம்பந்தர் , ஆக 1

## திருவரசிலி

சுவாமி ; அரசிலிநாதர் அம்பாள் ; பெரியநாயகி

ஒழிந்தியாப்பட்டு. புதுச்சேரி திண்டிவனம் வழியில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. அரசடி தீர்த்தம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

### திருவிரும்பைமாகாளம்

சுவாமி ; மாகாளநாதர் அம்பாள் ; குயின்மொழிநாயகி

புதுச்சேரி ரயில் நிலயத்துக்கு வடமேற்கில் 65 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. பங்குனி உத்திரம் விசேடம். காவடிகள் மிகுதியாக வருகின்றன.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

---

## துளுவ நாடு

### திருக்கோகர்ணம்

சுவாமி ; மகாபலேசுரர் அம்பாள் ; கோகர்ணநாயகி

இந்தத் தலம் வடகன்னடம் மாவட்டத்தில் உள்ளது மேற்கடற்கரையில் மர்மகோவாவில் கப்பலேறிக் கார்வார் வழியாகத்தெற்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். மங்களூரில் இருந்தும் கடல் வழியாகவும், நிலவழியாகவும் செல்லலாம். பெங்களூரில் இருந்து சாஹர் ரயில் நிலயம் அடைந்து அங்கிருந்து பேருந்தில் 90 கிலோமீட்டர் சென்றால் சிர்சி அடையலாம். அங்கிருந்து பேருந்தில் கும்டா வழியாக 90 கிலோ மீட்டர் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். புனவழியாகச் சென்றால் வாத்தார் ரயில் நிலயத்திலிருந்து 50 கிலோமீட்டர தூரத்தில் உள்ளது இறைவன் மஹாபல லிங்கேஸ்வரர். விநாயகர் நின்ற திருக்கோலம் காணவேண்டியது சிவராத்திரியில் இத்தலத்தில் கோடி தீர்த்த ஸ்நாநமும், தரிசனமும் மிக விசேடம் என்று சிவராத்திரிபுராணம் கூறுகின்றது மேற்குப்பார்த்த சந்நிதி கடலும் இருப்பதால் மிகவும் சிறப்புடைய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, ஆக 2

# வடநாடு

## திருப்பருப்பதம்

சுவாமி : பருப்பதநாதர் அம்பாள் ; பருப்பதநாயகி

ஸ்ரீ சைலம். மல்லிகார்ச்சுனம் என்பதும் இதுவே. கர்நூல் மாவட்டம் நந்தியால் ரயில் நிலயத்திலிருந்து வடகிழக்கில் 90 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இப்பொழுது நல்லவழி. காடு மலை இவற்றிடையே செல்ல வேண்டும். கோயில் நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகிறது

பதிகங்கள் : சம்பந்தர் 1, நாவுக்கரசர் 1, சுந்தரர் 1, ஆக 3

## திருவிந்திர நீலபருப்பதம்

சுவாமி : நீலாசலநாதர் அம்பாள் : நீலாம்பிகை

வடநாட்டுத் தலம். நேபாள ராச்சியத்தில் இருக்கிறது குறிப்பிட்ட காலத்தில் சென்று வழிபட வேண்டிய தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருவனேகதங்காவதம்

சுவாமி : அனேகதங்காவதநாதர்

அம்பாள் ; மனோன்மனி

வடநாட்டுத் தலம். கௌரிகுண்டம் என்று வழங்கப்படுகிறது. திருக்கேதாரத்துக்குச் செல்லும் வழியில் உள்ளது.

பதிகங்கள் : சம்பந்தர் 1, ஆக 1

## திருக்கேதாரம்

சுவாமி ; கேதாரநாதர் அம்பாள் : கௌரியம்மை

இமயமலைச்சாரலில் உள்ளது. ஹரித்துவாரத்திலிருந்து ரிஷிகேசம் அடைந்து தேப்பிரயாகை வழி

யாகப் பேருந்து பயணம் செய்து குலக்கட்டி 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ராணிபாக் 4 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ரம்பூர் 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது விலகேதர் 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. ஸ்ரீ நகர் 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. இவ்வுளவு தூரம் தபால் வசதி உண்டு.

பதிகங்கள் : சம்பந்நர் 1, சுந்தரர் 1, ஆக 2

## திருக்கயிலாயம்

சுவாமி : பரமசிவம் அம்பாள் ; பார்வதியம்மை

திருநொடித்தான்மலே. ஊனக் கண்ணுல் காணக் கூடிய தலமன்று. இறைவன் இறைவியோடு என்றும் கூடியிருக்கும் இடம். இது பொழுது செல்லுவது என்பது இயலாததாக இருக்கிறது சுக்ரதா 8 கிலோ மீட்டர் தூரத்திலும், பாட்டிசாரா 5 கிலோமீட்டர் தூரத்திலும், நர்கோடா 9 கிலோமீட்டர் தூரத்திலும், ருத்ரப் பிரயாகை 6 கிலோமீட்டர் தூரத்திலும், அகஸ்தியமுனி 15 கிலோமீட்டர் தூரத்திலும், குப்த காசி 18 கிலோமீட்டர் தூரத்திலும், பேட்டா சட்டி 9 கிலோமீட்டர் தூரத்திலும், ராம்பூர் 12 கிலோ மீட்டர் தூரத்திலும் கௌரி குண்டம் 15 கிலோ மீட்டர் தூரத்திலும். ஜங்கல்சட்டி 3 கிலோமீட்டர் தூரத்திலும், ராம்பாரா 6 கிலோமீட்டர் தூரத்திலும், கேதார்நாத் 8 கிலோமீட்டர் தூரத்திலும் உள்ளது. கோயில் உறைபனியால் மூடப்பட்டிருக்கும். இக் கோயில் மே மாதம் திறக்கப்பட்டு அக்டோபர் மாதம் மூடப்படுகிறது. ஆறுமாதம் தேவர்கள் வழிபாடு செய்வதாக வரலாறு பேருந்திலும் நடந்தும் சென்று காணவேண்டிய வடநாட்டுத் தலம்.

பதிகங்கள் : சம்பந்தர் 2, நாவுக்கரசர் 4, சுந்தரர் 1, ஆக 7




திருமுறைத் தலப் பயண விளக்கம் முற்றிற்று.






உ
சிவமயம்

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே.

— திருமந்திரம்.

